


**Their Majesties in Procession after laying the Foundation Stone of the All-India Memorial.**

எட்வர்ட் ஞாபக சின்னத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டிய பிறகு.



**State Entry: The Royal Procession at the Pavilion in Fort.**

சக்ரவர்த்தியின் ஊர்கோலம்.




**NATIVE PRINCES PAYING HOMAGE TO HIS MAJESTY.**

தேசமன்னர்கள் சக்ரவர்த்திக்கு ஸேவாஞ்சலி செய்தல்.




**THE PEOPLE'S THRONE: HIS MAJESTY PROCLAIMING BOONS THROUGH THE VICEROY.**

சக்ரவர்த்தி வைஸ்ராய்மூலமாய் நன்கொடை கொடுத்தது.

# பிழைக்கும் வழி

# PRACTICAL LIFE.

ஜி. எ. வைத்தியராமன், பி. எ.,
பத்திராதிபர்.

G. A. VaidyaRaman, B. A.,
EDITOR.

புஸ்தகம் 4. Vol. 4. | விரோதிகிருது ஹு தைமீ JANUARY, 1912. | ஸஞ்சிகை 1. No. 1.

## Practical Life.

A popular illustrated Tamil monthly magazine of general information and instruction devoted largely to agriculture, trade, industry, citizenship and popular, scientific and technical education.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | *Inland.* Rs. A. P. | | *Foreign* Rs. A. P. |
|---|---|---|---|
| Per annum ... | 4 0 0 | ... | ... 6 0 0 |
| Single copy ... | 0 6 0 | ... | ... 0 8 0 |
| Sample copy ... | 0 2 0 | ... | ... 0 3 0 |

RATES OF ADVERTISEMENT.

| | | |
|---|---|---|
| 1 Page | ... 5 0 0 | per month. |
| ½ do | ... 2 8 0 | do |
| ¼ do | ... 1 4 0 | do |

The above rates are all *net* and subject to no discount whatever. Orders should be accompanied with advance.

**Notice to Contributors.**—The Editor solicits contributions on subjects relating specially to agriculture, trade, industry and popular, scientific and technical education. Articles intended for the journal should be written in plain colloquial Tamil on one side of the paper only and on half margin. All articles which may be accepted will be paid for on publication. It will be understood that the publishers may at their discretion republish in book form articles which have been paid for at the time of publication in the journal.

No money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers, Messrs. G. A. Vaidya Raman & Co., 3 & 4, Sunkurama Chetty Street, Georgetown, Madras.

## பிழைக்கும் வழி.

முக்கியமாய் விவஸாயம், வியாபாரம், கைத்தொழில், ப்ராஜா லக்ஷணம், வித்யா விஷயங்கள் அடங்கிய ஸகலருக்கும் உபயோகமான படங்களடங்கிய, ஒரு மாஸாந்தாத் தமிழ்ப் பத்திரிகை.

தபாற்கூலி உள்பட சந்தா விவரம்.

| | உள் நாடு. | | அந்நிய நாடு. |
|---|---|---|---|
| வருஷம் 1க்கு | .. 4 0 0 | .. | 6 0 0 |
| தனிப்பிரதி | .. 0 6 0 | .. | 0 8 0 |
| மாதிரி காபி | .. 0 2 0 | .. | 0 3 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. ஸகல பணத்தையும் எங்களுக்கு நேரில் அனுப்பிவிடவேண்டும்.

விளம்பர விகிதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 பக்கத்திற்கு | மாஸம் | ஒன்றுக்கு | 5 0 0 |
| ½ பக்கத்திற்கு | ,, | ,, | 2 8 0 |
| ¼ பக்கத்திற்கு | ,, | ,, | 1 4 0 |

**வியாஸம் எழுதுகிறவர்கள் கவனிக்கவேண்டியவை.**

விவஸாயம், வியாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வியாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால் பிரசுரமானதும், எழுதினவர்களுக்கு தக்க ஸம்பாவனை செய்யப்படும். ஒவ்வொரு வியாஸத்தையும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒருபாதியை விட்டு மறுபாதியில் மட்டும் எழுதவேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

இந்தப் பத்திரிகையில் பிரசுரமாகும் வியாஸங்களுக்காக நிருபர்களுக்கு ஸம்பாவனை செய்திருக்கும் பக்ஷத்தில், அந்த வியாஸங்களை நாங்கள் எங்கள் இஷ்டப்படி எந்த விதம் வேணுமானாலும் மறுபடி பிரசுரிக்க அதிகாரமுண்டு என்பதை நிருப நேயர்கள் அறியவேணும்.

ஜி. எ. வைத்தியராமன் அண்டு கம்பெனி,
3 & 4, சுங்குராம செட்டித் தெருவு, மதராஸ்.

## EDITORIAL NOTES.

## பத்திராதிபர் குறிப்புகள்.

**Peace and Prosperity.**

ஸமாதானமும் செல்வமும்.—இங்கிலீஷ் ராஜாங்கத்தின் இந்திய அரசாட்சியில் 1911 ௵ டிஸம்பர் ௴ 12உ யானது ஒரு சிறந்த நாளாகும். அன்றையதினம் பகல் 12 மணிக்கு இந்தியாவிலிருந்து அமைதியின்மையும் ராஜாங்கவெறுப்பும் ஒழிந்துபோய் இந்தியாவில் ஸமாதானமும் செல்வமும் நிலைகொண்டன. அமைதியின்மைக்கு காரணகர்த்தர் லார்டு கர்ஸன். ஸமாதானத்தையும் செல்வாபிவிர்த்தியையும் நிலைநாட்டினவர் லார்டு ஹார்டின்ஜ். லார்டுகர்ஸன் இந்தியாவில் இங்கிலீஷ் ராஜ்யத்தை இங்கிலீஷ்காரர்கள் ப்ரதிஷ்டை செய்தார்களென்று கர்வங்கொண்டு இங்கிலீஷ் ராஜ்யத்தைச் சேர்ந்த மற்றதேசங்களைப் போலல்லாமல் இந்தியாவில் மனம்போனபடி ஆளுவதுதான் ஸரியானமுறை என்று எண்ணினர். ஆகையால் இந்தியர்களுடைய மனதையும் அவர்களுடைய அபிப்பிராயத்தையும் கொஞ்சங்கூட கவனிக்காமல் ராஜ்யநிர்வாகம் செய்துவந்தார். அதினால் இந்தியாமுழுமையும் அமைதியின்மையும், ஜனங்களுக்கு இங்கிலீஷ் ராஜாங்கத்தினிடத்தில் ஒரு வெறுப்பும் உண்டாயின. லார்டுகேர்ஸன் செய்தபிசகு என்னவென்றால், இங்கிலீஷ்ப் படிப்பால் இந்தியாவில் ஜனங்களுக்குள் புது உணர்ச்சிகளும் புது நோக்கங்களும் உண்டாயிருக்கின்றன என்பதையும், இந்தியாவை இங்கிலீஷ்காரர்கள் கைப்பற்றின கீர்த்தி ஒருபக்கமிருக்க, இந்தியாவானது இங்கிலீஷ் ராஜ்யத்திற்கே ஒரு பெரிய பாரம் என்பதையும், அதினால் இங்கிலீஷ் ராஜ்யத்திற்கே கேடுவருமென்பதையும், அவர் மறந்தார். இந்தியாவிற்கும் இங்கிலாந்துக்குமுள்ள அதிர்ஷ்டவசத்தால் மேற்சொன்ன பிசகுகள் லார்டு ஹார்டின்ஜுக்கு நன்றாய்த்தெரிந்தன. அவர், யார் என்ன சொல்வார்களோவென்று கொஞ்சங்கூட பயப்படாமல், இந்தியாராஜ்யத்தில் நிர்வாகத்தைப் பற்றி தன்னுடைய அபிப்பிராயங்கள் இன்னின்னவையென்று இந்தியாமந்திரியாகிய லார்டு க்ரூவுக்கு எடுத்துச் சொன்னர். லார்டு க்ரூ அந்த அபிப்பிராயத்தை அங்கீகரித்து இந்தியர்களை உடனே சாந்தப்படுத்த வேண்டியது அவசியம் என்று ஒப்புக்கொண்டார். இதைச் செய்த விதந்தான் ரொம்பவும் ஆச்சரியிக்கத் தக்கது. டிஸம்பர் ௴ 12உ டில்லியில் கூடிய ஒருபெரிய தர்பாரில் இந்தியாவின் தலைநகரை கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றிவிட்டதாகவும், வங்காளத்தைப் பிரித்ததை மாற்றி ஒன்றாகச் சேர்த்துவிட்டதாகவும், வருஷம்ஒன்றுக்கு படிப்புக்காக இப்பொழுது செலவிடுவதை விட இன்னும் 50 லக்ஷரூபாய் அதிகமாகச் செலவிடப் போவதாகவும், மகாராஜா சக்ரவர்த்தி அவர்கள் விளம்பரப் படுத்தினர். இப்படிக் கொடுத்த நன்கொடைகளை யோஜித்துப் பார்க்குமளவில் இந்தியாவை இதுவரையில் ஆண்டுவந்தது போலல்லாமல் இனிமேல் புதுமுறையாக ஆளுவார்கள்போல் தோன்றுகிறது. அதாவது, இந்தியாவில் ஜனங்களைப் படிப்பிப்பது கவர்ன்மெண்டாரின் கடமையென்றும், ராஜ்ய நிர்வாகத்தில் ஜனங்களின் அபிப்பிராயத்தைக் கலந்து கொண்டு காரியங்களைச்செய்வது உசிதமானமுறையென்றும், கவர்ன்மெண்டார் அங்கீகரித்ததாக ஏற்படுகிறது. அல்லாமலும், லார்டு ஹார்டின்ஜுக்கும் லார்டு க்ரூவுக்கும் நடந்த கடிதப்போக்குவரத்தில் ஒரு விசேஷமான கருத்து இருப்பதாகத் தெரியவருகிறது. அதாவது, அந்தந்த மாகாணகாரியங்களை அங்கங்கேயுள்ள ஜனங்

களும், கவர்ன்மெண்டுகளும் நிர்வகித்துக் கொண்டு, அவரவர்களுடைய க்ஷேமகாரியங் களைச்செய்துகொள்ள வெண்டுமென்றும், சக்ர வர்த்தியும் அவருடைய மந்திரிகளும் மேற் சொல்லிய மாகாண நிர்வாகம் ஸரிவா நடந்து வருகிறதா வென்று மேற்பார்வை பார்ப்பதே யொழிய, வேறு உட் புகுந்து காரியங்களைப் பார்ப்பதாக எண்ணமில்லையென்றும், தெரிய வருகிறது. இப்படி ராஜ்ய நிர்வாகத்தை அங் கங்கேயுள்ள ஜனங்களுக்கு ஒப்புவிப்பதாக ஏற்பட்டுள்ள எண்ணங்கள் முதலியவைகளை ஜனங்கள் நம்பலாமென்று மகாராஜா சக்ர வர்த்தி அவர்கள் வாக்களித்திருக்கிறார். ஆகை யால் இங்கிலீஷ் ராஜாங்கத்தார் அவர்களு டைய கடமையை நிறைவேற்றி விட்டார்கள். இனிமேல் ஜனங்கள் அவரவர்களுடைய கட மையைச் செய்து நமக்குக் கொடுப்பதாகச் சொல்லும் உன்னத ஸ்தானங்களை வகிப்ப தற்கு வேண்டிய திறமையையும் புகழையும் பெற முயல வேண்டும்.

"பிழைக்கும் வழி"யில் ராஜாங்கவிவகாரங் களைப் பற்றி இவ்வளவு தூரம் எழுதுவானே என்று சிலபேர்கள் கேட்கலாம். தேசத்தின் க்ஷேமாபிவிர்த்திக்கு ராஜாங்க நிர்வாகம் நடக் கும்முறை முக்கியகாரணம்சங்களில் ஒன்று தான். ஆனால் எந்ததேசமானாலும் ஸரி, அது முன்னேறுவதற்கு அதின் செல்வப்பெருக்கே முக்கியகாரணமென்பதும், ஆகலால் தேசத்தி லுள்ள மகா புத்திசாலிகளும் திறமையுள்ள வர்களும் வேறு விவகாரங்களில் பிரவேசித்து வேலைசெய்வதை விட ஜனங்களின் க்ஷேமத் தையும் தேசத்தின் செல்வத்தையும் விருத்தி செய்ய முயல வேணுமென்பதுமே நமது துணிவு. அதற்குத்தக்கபடி ராஜாங்கத்தாரும் இடம்கொடுத்து ஒத்துழைக்கத் தயாராயிருப் பதாக போன டிஸம்பர்மீ 12உ மகாராஜா சக்ரவர்த்தியவர்கள் செய்த விளம்பரத்தால் ஏற்படுவதால் அந்ததினத்தை சிறப்பான தினம் என்றும், அதுமுதல் இந்தியாவின் க்ஷேமம் ஆரம்பமாகிறதென்றும், சொல்லத் துணிந்தோம்.

**Supply of Cotton.**

பருத்தி ஸப்ளை.—கொஞ்ச காலமாக பஞ் சாலைகள் வைத்திருக்கிறவர்களுக்கு பருத்தி அகப்படாத கஷ்டம் ஜாஸ்தியாய்விட்டது. அதினால் பருத்தியின்விலை ரொம்பஏறியும், நீக்குப் போக்குத் தெரியாமல் பலபேர்கள் பஞ்சுகளை வாங்கியும் விற்றும், பஞ்சாலை கள் வைத்திருக்கிற முதலாளிகளுக்கு நஷ் டமும் தொழிலாளிகளுக்குக் கஷ்டமும் நேர்ந்துவருகிறது. உலகத்தில் பஞ்சுவிளைவு குறைந்ததினால் இப்படிப்பட்ட கஷ்டங் கள் நேரிடவில்லை. இங்கிலாந்தில் நெசவு ஆலைகளுக்கு அதிகப் பருத்தி வேண்டியிருக் கிறதென்றதாலும் ஏற்படவில்லை. இப்படி பருத்தியின்விலை ஏறினதற்குக் காரணம் இங் கிலாந்தல்லாத மற்ற தேசங்களிலும், அமெ ரிக்காவில் ஐக்கிய நாடுகளிலும், நெசவுத்தொ ழில் அதிகமாக அபிவிர்த்தியாயிருப்பது தான். 1910ஞூக்கு முன் 18 வருஷங்களில் ப்ரிட்டன் செலவழித்தபஞ்சானது 100-க்கு 4 வீதம் குறைந்தே யிருக்கிறது. இதே காலத் தில் ஐரோப்பாவில் 100-க்கு 70 வீதமும் அமெரிக்காவில்100-க்கு 90வீதமும், பருத்தி அதிகமாக செலவழிந்திருக்கிறது. இங்கிலாந் திலும் அமெரிக்காவிலும் செலவாகும் பருத் தியை ஒப்பிட்டு பார்க்கும் பொழுது, இங்கி லாந்தைவிட அமெரிக்காவில் 1½பங்குக்குமேல் அதிகமாகிறது. 30 வருஷங்களுக்கு முன்னால் அமெரிக்காவில் பருத்தி 70 லக்ஷம் மூட்டை களுக்குக்குறைவாகவே விளைந்துகொண்டிருந் தது. இதுவும், இன்னும் இதரதேசங்களில் விளையும் பருத்தியுமாகச்சேர்ந்து, உலகத்தில் பருத்தி வேண்டியவர்களுக்குக்கண்டு, வருஷந் தோறும் கொஞ்சம் மிகுந்தால் பருத்தியின் விலை ஒரே ரீதியாக இருந்தது. இப்பொழுது அமெரிக்காவில் சுமார் 140 லக்ஷம் மூட்டை

பருத்தி விளைகிறது. இன்னும் இதரதேசங்களில், முன்னேவிட பருத்தி அதிகமாக விளைகிறது. மேலே சொல்லியபடி, இங்கிலாந்துக்கு வேண்டிய பருத்தி எப்பொழுதும் போல்தான் இருக்கிறது. இப்படிக்கெல்லாமிருந்தும், பருத்தியின் விலை ஒட்டிக்கு இரட்டியாகி எங்கேபார்த்தாலும் பருத்தி அகப்படுவதில்லையென்று முறையிடுகிறார்கள். இந்தக் கஷ்டத்திற்கு விமோசனம் ஏற்பட்டாலொழிய இங்கிலாந்தில் லாங்கஷையரிலுள்ள முதலாளிகளும் தொழிலாளிகளும் பிழைப்பில்லாமல் சாகவேண்டியதுதான். இந்தியாவில் தற்போது அமெரிக்காவில் எவ்வளவு பருத்தி விளைகிறதோ அதில் பாதிவிளைகிறது. இந்தியாவில் 20 லக்ஷம் ஏகராவில் பருத்தி சாகுபடி செய்யப்படுகிறது. இந்தப்பருத்தியெல்லாம் குட்டைப் பருத்தியே. ஆகையால் இது இங்கிலாந்தில் உபயோகப்படுவதில்லை. பருத்தியை ஸரிவர ஸாகுபடி செய்யும் பக்ஷத்தில் இந்தியாவில் வெகுசீக்கிரத்தில் இப்பொழுது விளைகிறதைவிட இரண்டு மடங்காக்கிவிடலாமென்று அநேக நிபுணர்கள் சொல்லுகிறார்கள். இப்படிச் செய்தால், நீளப்பருத்தியை உபயோகிக்கும் மற்ற தேசங்கள் இந்தியாவில் விளையும் குட்டைப்பருத்தியை உபயோகித்துக்கொண்டு, அதனால் விடுதியாகும் நீளப்பருத்தி இங்கிலாந்துக்கு உதவிவிடும். தற்போது இந்தியாவில் பருத்தியை நன்றாய் ஸாகுபடி செய்கிறதில்லை. உழவு ரொம்ப பஞ்சை. எருப்போடுவது ஸ்வல்பம். தண்ணீர் பாய்ச்சுவதும் குறைச்சல். இவைகள் ஒரு பக்கமிருக்க, விவஸாயிக்குக் கடன் தொந்தரவு, பஞ்சையான விதை, பயிரில் விழும்பூச்சிகள், இப்படிப்பட்ட தொந்தரவுகள் ஜாஸ்தியாயிருக்கின்றன. விதையைப் பொறுக்கி எடுத்து உபயோகித்தால் நல்ல பருத்தியை விளைவிக்கலாம். ஆனால் வழக்கமாய் விளைவதைவிட அது கொஞ்சம் குறைச்சலாகத்தான் விளைகிறது. குட்டைப் பருத்தியைவிட நீளப்பருத்திக்கு ஜாஸ்திவிலையும் கிடைக்கிறதில்லை. ஆதலால் விவஸாயிகள் நீளப்பருத்தி விளைவிப்பதில் லாபமில்லையென்றறிந்து குட்டைப் பருத்தியையே ஸாகுபடி செய்கிறார்கள்.

## Company Promoting.

கம்பெனி கூட்டுதல்.—நம்முடைய நாடு தழைந்தோங்கி நாமும் நல்ல ஸ்திதிக்கு வரவேண்டுமானால் விவஸாயம் வியாபாரம் கைத் தொழில் இவைகளை விருத்தி செய்யவேண்டும். இதற்கு ஜாஸ்தியான பணம் வேண்டியது அவசியம். பணமில்லாமல் எதுவும் நடக்காது. இப்படி அபிவிர்த்தி செய்யவேண்டிய சில விஷயங்கள் ஒருவரால் தனித்து செய்யக்கூடியவையல்ல. லேசாய் நடக்கக்கூடியனவுமல்ல. ஆகையால் பல ஜனங்கள் அங்கங்கேசேர்ந்து அவர்களாலான பொருளைக்கொடுத்து கூடுமானமட்டில் ஒரு பெருந்தொகையைச் சேர்த்தும், அதை வியாபாரத்திலாவது மற்றத் தொழில்களிலாவது உபயோகிக்கவேண்டும். இப்படி பலர் கூடி நடத்தும் கூட்டத்துக்கு கம்பெனி என்று பெயர்.

ஒருவிதப் புகலுமில்லாத சில வீணர்கள் பிறர் பொருளை மோசம் செய்யும் எண்ணத்துடன் ஒன்றாகச் சேர்ந்து கம்பெனி என்று ஏற்படுத்தலாம். தம்மை கம்பெனியின் மானேஜ்மெண்டிலிருந்து விலக்கக்கூடாதபடி கம்பெனியின் ரூல்களில் தந்திரமாய் சிலவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். இந்த தந்திரத்தை சிலர் அறிய சக்தியற்றவர்களாயும், சிலர் சாவகாசமில்லாதவர்களாயும், கம்பெனிக்காரர்கள் பேச்சையும் அவர்கள் சிநேகிதர்கள் பேச்சையும் கேட்டு கம்பெனியில் சேர்ந்து மோசம் போவதுண்டு. சில கம்பெனிகள் முதலில் சில வருஷங்களில் லாபம் ஜாஸ்தியாய்க் கிடைத்ததுபோல் மூலதனத்தில் எடுத்தாவது பங்காளிகளுக்கு டிவிடெண்ட் அதாவது பங்குப் பணத்துக்கு வட்டி, பங்கிட்டுக் கொடுத்து, அதனால் பங்குகளின் விலை உயரும் சமயம் பார்த்து கம்பெனியின் முக்

கியஸ்தர்கள் தங்கள் பங்குகளை லாபத்திற்கு விற்றுப் போட்டு விலகிக் கொள்ளுவதுண்டு. பிறகு சீக்கிரத்தில் உண்மையான நிலைமை வெளியாகி, கம்பெனி கெட்டுப்போய் பங்காளிகள் நஷ்டமடைவார்கள். சில கம்பெனிகளில் எந்த விதத்திலாவது ஒரு கௌரவமுள்ள பிரபுவின் பெயரை வெளிப்பார்வைக்கு கம்பெனியின் முக்கியஸ்தராகப் போட்டுக் கொண்டு காரியங்களை நடத்துவதுண்டு. தகுந்த அந்தஸ்துள்ள மனிதர்களுடைய பெயரிருப்பதை நம்பி சிலர் கம்பெனியில் சேர்ந்து மோசம் போகலாம். கம்பெனிகளில் சிலர் ஜாஸ்தியான பங்கைப் பெற்றுக்கொண்டு, அது மூலமாய் ஸர்வ அதிகாரத்தையும் வகித்து மோசங்கள் செய்யமுடியும். ஸாவகாசக் குறைவினால் கம்பெனிக்கு வரக்கூடாத பங்காளிகளிடத்திற்கு தாங்கள் போய்யாவது அல்லது தங்கள் வகை மனிதர்களை அனுப்பியாவது அவர்களுடைய அனுமதியைப் பெற்று தங்களிஷ்டம்போல், மீட்டிங்களில் வந்திருக்கும் பங்காளிகளின் ஆக்ஷேபனைக்கு இடமின்றி ஆடிடர் முதலானவர்களை நியமித்துக்கொண்டு வேண்டிய மோசம் செய்வதுண்டு.

இப்படிப்பட்ட பலமோசங்கள் செய்யக்கூடுமாதலால் ஒரு கம்பெனியில் பங்காளியாய்ச் சேருவதற்குமுன் கம்பெனியின் ரூல்களையும் முக்கியஸ்தர்களின் முன் நடவடிக்கை, செல்வம், அந்தஸ்து, இவைகளையும் கவனிக்க வேண்டும். அப்படிச் சேர்ந்தபின் அதில் ஜாஸ்தி பங்கு வைத்திருப்பவர்களின் செல்வ நிலைமையை அடிக்கடி கவனித்து வருவதோடு ஒவ்வொரு பங்காளியும் தன்னுடைய லாபத்திலே திருஷ்டியுடனிருக்கவேண்டியது. ஆடிடர் நியமிக்கும்பொழுது தகுந்த அந்தஸ்துள்ளவர்களை நியமிக்கவேணும்.

**Protective Duties for India.**

இந்தியாவிற்கு காப்புவரிகள்.—டிஸம்பர் மீ கல்கத்தாவில் நடந்த இந்தியன் இண்டஸ்டிரியல் கான்பரென்ஸ் என்னும் கைத்தொழில் ஆலோசனை ஸபையில் அதின் அக்ராஸனாதிபதியாகிய கனம் தாதாபாய் என்பவர் செய்த ப்ரஸங்கத்தை சுருக்கமாக இன்னொருபக்கத்தில் எழுதியிருக்கிறோம். கனம் தாதாபாய் இந்தியாவில் கைத்தொழில் அபிவிர்த்தி விஷயமாக புதிதாக ஒன்றும் சொல்லிவிடவில்லை. வேறு எல்லா முக்கியவிஷயங்களைவிட தேசத்தின் கைத்தொழில்களை அபிவிர்த்தி செய்யவேண்டுமென்று தாதாபாய் சொன்னார். அவர் சொன்னது ரொம்ப ஸரி. பசிக்குச் சோறு அகப்படவேண்டியது அவசியம். அதற்குப் பிற்பட்டுத்தான் மற்றவைகளெல்லாம். பசியாற சாப்பிட, ஸம்பாதிக்க, வியாபாரமும், கைத்தொழில்களுந்தான் உலகமெங்கும் கண்டறிந்த உபாயங்கள். ஆகையால் தேசாபிமானிகளும் தேசநிர்வாகிகளும் கைத்தொழில்களை அபிவிர்த்தி செய்வதில் உழைப்பதுதான் மகத்தானவேலையென்றும், பயன்படக் கூடியதென்றும் சொன்னார். தாதாபாய் செய்த ப்ரஸங்கத்தில் கைத்தொழில்கள் ஏன்வரவர நன்றாக சீக்கிரத்தில் அபிவிர்த்தியாக வில்லையென்றும், அப்படி ஆவதற்கு என்ன செய்யலாமென்றும், புதிதான யோஜனைகள் ஒன்றும் சொல்லாவிட்டாலும், அவைகளைப்பற்றிப் பொதுவாக ஜனங்கள் என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களோ அவைகளையெல்லாம் விடாமல் ஒன்றுசேர்த்து எடுத்துச் சொல்லியிருக்கிறார். அவைகளெல்லாம் நடக்கக் கூடியவைகளானால் சிலாக்கியந்தான். இந்தியாவில் அதன் ஜனங்களின் நன்மைக்கு வேண்டியபடி வரி விதிக்கவும், இறக்குமதியாகும் சரக்குகளின்மேல்

காப்புவரிகள் போடவும், ஸ்வதந்திரம் கிடைக்குமானல், இந்தியாவின் கைத்தொழில்கள் சுருக்கக்கடைத் தேறிவிடும். ஆனல் இந்தியாவில் போடஉத்தேசிக்கும் பல காப்புவரிகள் இங்கிலீஷ்காரர்கள் சரக்குகளின்மேல்தான் விழும். இங்கிலீஷ்வியாபாரிகளின்போட்டியே நமக்குப் பெரும்போட்டியாதலால், அவர்கள் "தனக்குமிஞ்சிதர்மம்" என்றபழமொழியை மறந்து, தர்மிஷ்டர்களாகி, இந்தியாவில் கைத்தொழில்கள் பெருகி, அது க்ஷேமப்படட்டுமென்று ஸமீபத்தில் எண்ணுவார்கள் என்று தோன்றுகிறதோ? மேற்சொன்னபடி காப்புவரிகள் போடுவது ஸாத்தியமென்றே வைத்துக் கொள்வோம். விவஸாயமே முக்கியத் தொழிலாயுள்ள இந்தியாவில் அப்படிச் செய்வதுதான் ஸரியான முறையென்று நிச்சங்கையாய்ச் சொல்லத்துணியலாமா? இறக்குமதியாகும் ஸாமான்களின் மேல் வரிபோட்டால் முதலில் என்ன ஏற்படுமென்றல், அவைகளின்விலை விகிதங்கள் உயர்ந்துவிடும். அதாவது அவைகளை வாங்குபவர்களின் மேல் ஒருவரி போட்டது போல்ஆகும். இந்தியாவில் விவஸாயிகளே அதிகமாகையால், மொத்தமாய்ப் பார்த்தால் அவர்கள்தான் அதிக ஸாமான்கள் வாங்குகிறர்கள். இவர்கள் ஏற்கனவே நிலத்தில்விளையும் அயன்கண்டு முதலில் பாதியை கிஸ்தியாகக் கட்டிவிடவேண்டியிருக்கிறது. கிஸ்தியின்ரூபாய்க்கு ஒருஅணு வீதம் லாண்டு செஸ்ஸும் கொடுத்துவருகிறர்கள். தவிர, இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும்அரிசியின் மேல்மணங்குக்கு 3-அணு வீதம்வரி வஸூல் செய்யப்படுவதால், அதுவும் விவஸாயிகள் தலையின்மேல் போட்டவரி ஆகிறது. இன்னும் சட்டப்படியில்லாமல் போனலும், பண்டைகாலத்து வழக்கப்படி கிராமாதிகாரிகளுக்குக்கொடுக்கும் வர்த்தனை முதலிய செலவுகளையும் சேர்த்தால் மொத்தத்தில் விவஸாயிகளின் வரும்படியில் 100-க்கு, கிட்டத்தட்ட 60 பங்கு போய்விடும். இவ்வளவு பளுவானவரி விவஸாயிகள் தலையில் ஏறியிருப்பதால் அவர்களுடைய கதி க்ஷீணித்திருப்பதில் ஆச்சரியமென்ன? சொல்லப் போனல்; கைத்தொழில் அபிவிர்த்திக்காக காப்புவரி போடுவதைவிட விவஸாயிகளுக்கு ஒத்தாசை செய்யவேண்டியது அவசியம். கைத்தொழில்கள் சீக்கிரத்தில் அபிவிர்த்தி ஆகாததற்கு அநேக காரணங்கள் உண்டு. இன்னும் கேட்டால், கைத்தொழில்களை கீழே அழுத்த சில அம்சங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைப் பற்றி போகப் போக எழுதுவோம். எதன் முத்தியில், விவஸாயிகளின் பளுவைக் குறைக்காமல், இறக்குமதியாகும் சரக்குகளின் மேல் காப்புவரிகள் போடும்பக்ஷத்தில், முதலாளி கொழுக்க விவஸாயியை இரைகொடுப்பதாகும். இந்தியாவில் விவஸாயிகளே பெரும்பான்மையோரானதால், காப்புவரிபோடுவதால் இந்தியாவின் பெரும்பான்மையான ஜனங்களுக்கு அநியாயம் செய்வதாகும்.

**Industrial Success.**

கைத்தொழில்களில் வெற்றி.—போன மீத்தில் கல்கத்தாவில் நடந்த இந்தியன் இண்டஸ்ட்ரியல் கான்பரென்ஸில் கைத்தொழில்களில் வெற்றி பெறுவதற்கு நாலு அம்சங்கள் அவசியம் என்று கனம் தாதாபாய் தன்னுடைய அக்கிராஸன ப்ரஸங்கத்தில் சொன்னர். அவைகளாவன :—

(1) போதுமான நடைமுதல்.

(2) தொழிலில் திறமை.

(3) கூலிகள் ஸல்லிஸாய்க் கிடைப்பது.

(4) செய்த சரக்குகளை ஸுலபமாய் விற்பது.

இந்தியாவில் முதல்தான் தேவை. ஜனங்கள் சேர்த்து வைத்திருக்கும் பணம் ரொம்ப ஸ்வல்பம். 30 வருஷத்துக்கு ஒரு தடவை ஸெட்டில்மெண்டு செய்வதாலும், இந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் ஏற்பட்டிருக்கிற சட்டப்படி பாகப் பிரிவினைகள் ஏற்படுவதாலும், குடும்பங்கள் சேர்ந்திருப்பதாலும், கைத்தொழில்களுக்கு வேண்டிய முதல் சேர்வதற்கு ஹேதுக்கள் இல்லை. ஆகையால் இங்கிலீஷ்காரர்களிடமிருந்து இந்தியர்கள் வியாபாரங்களுக்காக கடன் வாங்கத் தயங்கக் கூடாது. ஆனால் அந்நிய தேசக்காரர்கள் கடன்வாங்கின முதலைக்கொண்டு இந்தியாவில் வந்து சுரங்கங்களை வெட்டியும், வியாபாரம் செய்தும், லாபத்தை அவர்களுடைய தேசத்திற்கு அடித்துக்கொண்டு போகும்படிவிடக் கூடாது. அந்நியர்கள் அவர்களுடைய முதலை நமக்குக் கடனாகக் கொடுத்து, நாம் அவைகளைக்கொண்டு தொழில்களை நடத்தவேண்டும். இன்னும், ஐரோப்பியர்கள் தங்கள் முதலைப் போட்டு நடத்தும் கைத்தொழில்களையும் வியாபாரங்களையும் இந்தியர்கள் இஷ்டப்பட்டால் வாங்கிவிடும்படி கவர்ன்மெண்டார் ஒத்தாசை செய்யவேண்டுமென்றும் தாதாபாய் சொன்னார்.

'கொஞ்ச கொஞ்சம்' ஜமீன்தார்களிடத்திலும் பெரிய நிலஸ்வான்களிடத்திலும் இருக்கும்முதலை அவர்கள் கைத்தொழில்களில் போடும்படிக்கு அவர்களுக்கு தக்கப்பட்டங்கள் கொடுத்து மரியாதைகள் செய்தும், அவர்கள் ஏற்படுத்தும் வியாபாரங்களுக்கு குறைந்ததாக வட்டி கட்டிக்கொடுத்தும், அவர்களுடைய கணக்குகளை தணிக்கை செய்தும், இன்னும் அவர்கள் தொடங்கும் வியாபாரம் பலக்கும் போலிருந்தால், பணம் கடன் கொடுத்தும், கவர்ன்மெண்டார் ஒத்தாசை செய்யவேண்டுமென்று சொன்னார். தொழில் திறமையைப் பற்றிப் பேசும்பொழுது, மூலாதாரப்படிப்பை வரவர கட்டாயமாயும் இலவசமாயும் செய்யவேண்டுமென்றும், பரம்பரையாய்த் தேர்ந்த தொழிலாளிகளை சீர்படுத்தி நல்ல ஆயுதங்களைக்கொண்டும் யந்திரங்களைக் கொண்டும் வேலை செய்வதற்கும், யந்திரங்களைப் பழுதுபார்க்கவும் பூட்டவும், மில்களை ஸமாளிக்கவும், வேண்டிய டெக்னிகல் யெஜுகேஷன் அதாவது தொழில் ஸம்பந்தமான படிப்பை அபிவிர்த்தி செய்யவேண்டுமென்றும் சொன்னார். இப்படிச் செய்வதற்கு தேசத்தில் எங்கே பார்த்தாலும் டெக்னிகல் ஸ்கூல்களும் கைத்தொழில் ஸ்கூல்களும் ஏற்படவேண்டும். பொறுக்கி எடுத்த சில இடங்களில் டெக்னலாஜிகல் காலேஜ், அதாவது தொழில்கள் ஸம்பந்தமான காலேஜ்களும், ஆராய்ச்சி சாலைகளும், ஏற்படவேண்டும். இப்பொழுது ஐரோப்பா அமெரிக்கா கண்டங்களுக்குப் போய் தொழில்களைப் படித்துக் கற்றுவருவதற்காக சிறுவர்களுக்கு கொடுக்கும் ஸ்காலர்ஷிப்புகளை இன்னுமதிகமாகக் கொடுக்கவேண்டும். இவைகளோடு, அங்கங்கே பொருட்காட்சிகள், நிரூபணப் பண்ணைகள், நீரூபண பாக்டரிகள், ஏற்படவேண்டும். ஊரூராய்ப்போய் ப்ரஸங்கங்கள் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். தேசீய பாஷைகளில் துண்டுப் பத்திரிகைகள் அச்சிட்டு, பெரிய யந்திரங்களின் உபயோகங்கள், அவைகளால் உண்டாகும் நன்மைகள், அவைகளைக்கொண்டு வேலைசெய்யும் வழிகள், இவைகளை ஜனங்களுக்கு போதிக்கவேண்டும். இவைகளெல்லாம் கவர்ன்மெண்டார் செய்ய வேண்டிய வேலைகள். பொது ஜனங்களும் படிப்பின் அபிவிர்த்திக்காக தர்ம ஸொத்துக்கள் ஏற்படுத்தவேண்டும் என்றார் தாதாபாய்.

கூலி ஆட்களைப் பற்றிப் பேசும்போது, இந்தியாவில் கூலி விகிதங்கள் ஸ்வல்பமென்றும், கூலிக்காரர்கள் எதேஷ்டமாய் அகப்படுவார்களென்றும் சொல்வது பிசகுகளென்று சொன்னார். கூலி விகிதங்கள் குறைச்சல் என்பது வாஸ்தவந்தான். மொத்தத்தில் கொடுத்த கூலியையும் செய்த வேலையையும் பார்க்கும்போது கூலி விகிதம் வாஸ்தவத்தில் அதிகம் என்று ஏற்படும். இந்தியாவில் கூலிகள் திட சரீரிகள் அல்ல. அப்படி திடசரீரிகளல்லாதவர்களானாலும், பழக்கவழக்கங்களினாலும், பிடித்து நின்று வேலைசெய்யக் கூடாதவர்கள். கூலி வாங்குகிறோமே, அதற்கு வேலை செய்யவேண்டுமென்ற பொறுப்பும் நன்றி அறிவும் இல்லாதவர்கள். செய்கிற வேலையில் சிரத்தை கிடையாது. எஜமான் எப்படிம் பாழாய்ப்போனால் என்ன, தம்கூலி கிடைத்தால் போதும் என்று எண்ணுகிறவர்கள். கூலியாட்கள் அகப்படாத தொந்தரவு நீங்குவதற்கு கூலிகள் வெளி தேசங்களுக்குப் போகக்கூடாதென்று தடுக்கவேண்டும். இந்தியாவிலேயே கூலிகள் அதிகமாக இருக்கும் ஊர்களிலிருந்து போதுமான கூலியாட்கள் அகப்படாத இடங்களுக்கு அவர்களைப் போகத் தூண்டவேண்டும். விவஸாயம் முதலிய எல்லாத் தொழில்களிலும் எவ்வளவு ஆட்களை நிறுத்தலாமோ அவ்வளவும் நிறுத்தி, அதற்குப் பதிலாக யந்திரங்களை உபயோகப்படுத்தவேண்டும்.

இவைகளை யெல்லாம் சொல்லிவிட்டு, செய்யும் சரக்குகளை விற்பதற்கு வேண்டிய முறைகளை எடுத்துச் சொன்னார். முதலாவது, அந்நிய தேசங்களிலிருந்து வரும் ஸாமான்களின் மேல் காப்பு வரிபோடுவது அவசியம். இரண்டாவது, ஜனங்கள் சுதேச ஸாமான்களையே வாங்கவேண்டும். கவர்ன்மெண்டாரும் இந்தியாவில் செய்யப்படும் ஸாமான்களையே வாங்கவேண்டும். உப்பு, கைத்தொழில்களுக்கு வேண்டிய சாராயம், இவைகளை செய்ய வஸதிகள் கொடுக்கவேண்டும். இந்தியாவில் செய்யப்படும் துணிகளின்மேல் விதித்திருக்கிற எக்ஸைஸ் வரியை எடுத்துவிடவேண்டும். ஸாமான்களுக்கு ரெயில் சார்ஜை குறைக்கவேண்டும். படகுகள் போவதற்கான கால்வாய்களை சீர்படுத்தவேண்டும். அங்கங்கே வழங்கும் படிகளுக்கும் படிக்கல்களுக்கும் பதிலாக, ஒரே சீரானபடிகளையும் படிக்கல்களையும் ஏற்படுத்தவேண்டும். வியாபார விஷயமாயும் தொழில்கள் விஷயமாயும் நிபுணருடைய அபிப்ராயம் வேண்டுமென்று யாராவது கேட்கும் பக்ஷத்தில் அதையும் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். இவைகளெல்லாம் கவர்ன்மெண்டாருடைய கடமைகள்.

முதலாளிகள், செய்யும் ஸாமான்களை விற்பதற்காக ஏஜண்டுகளை ஊரூராய் அனுப்பவேண்டும். தனித்தனி வீடுகளில்நடக்கும் கைத்தொழில்களில் எல்லாத் தொழிலாளிகளையும் ஒன்று சேர்த்து அவைகளை கோவாபரேஷன், அதாவது ஐக்கிய முறையில் நடத்தவேண்டும். தவிர, வியாபார சங்கங்கள் ஏற்படுத்தவேண்டும். இவைகளெல்லாம் உள்நாட்டு வியாபாரத்தை பலப்படுத்துவதற்கானவைகள்.

இந்தியாவில் செய்யும் சரக்குகளை அந்நிய நாடுகளில் விற்க, இதர தேசத்தார்கள் இந்தியாவில் செய்யும் சரக்குகளின் மேல் போடும் இறக்குமதி வரிகளை எடுத்துவிடும்படிக்கும், இந்திய சரக்குகள் அடங்கிய காட்சிச் சாலைகள் வைக்கும்படிக்கும், கவர்ன்மெண்டார் ஒத்தாசை செய்யவேண்டும். இவ்வகைகளை யெல்லாம் சொல்லிவிட்டு, கடைசியாய் கவர்ன்மெண்டார் கருணை காட்டவேண்டுமென்றும், இந்தியாவின் நன்மைக்குத் தக்கபடி வரிவிகிதங்கள் போட ஸ்வதந்திரம் வேணுமென்றும், கவர்ன்மெண்டாரே தொழில்களைச் செய்து காட்டவேண்டுமென்றும், விவஸாயிகளுக்கு ஒத்தாசை செய்ய வேண்டுமென்றும், விவஸாயிகளின் மூலதனமான ஆடுமாடுகள் தற்காலத்தில் கொல்லப்படுவதுபோல் அடிபடாமல் இருக்க, ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், ஜனங்கள் தங்கள் ஆசார நடவடிக்கைகளைத் திருத்திக்கொள்ள வேண்டுமென்றும், கேட்டுக்கொண்டு தமது ப்ரஸங்கத்தை முடித்தார்.

## INVESTMENT IN LAND.

BY
RAO BAHADUR V. K. RAMANUJACHARIAR, B.A.

## நிலத்தில் பணம் போடுதல்.

இந்தஜில்லாவில் ரிவினியூஸெட்டில்மெண்டு 1303-ம் பஸலியில் அதாவது 1893 ஹூ ஜூலை 1 உயில் ஆரம்பிக்கிற வருஷத்தில் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டதென்றும், அதின் செலாவணி முப்பது வருஷமென்றும் எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். அதின் பிறகு இப்பொழுது பதினெட்டுவருஷமாயிற்று. இன்னும்பன்னிரெண்டு வருஷத்தில் அந்த ஸெட்டில்மெண்டு புதிது படுத்தப்படும். அப்போது புது ஸெட்டில்மெண்டுக்கு முந்திய பஞ்சமில்லாத இருபதுவருஷத்திய ஸராஸரி தானியவிலைகளை மாத்திரம் கவனித்து புது ஸெட்டில்மெண்டு ஏற்படுமென்று ஸர்க்கார் ஸமீபத்தில் சில ஜில்லாக்களில் செய்ததைப் பார்த்து தெரிகிறது. முன்போல் மருப்படியும் மண்ணின்தரம் பார்ப்பதில்லை. அந்த காலத்தில் தரிசாயிருந்து அந்தக்காரணத்தால் தரம் ஏற்படாமல் இருந்து பிறகு ஸாகுபடிக்கு வந்திருக்கும் நிலங்களுக்கும் ஸமீபத்தில் ஸாகுபடிக்கு வருமென்று தோன்றும் நிலங்களுக்கும் மண்ணின் தரம் ஏற்படவேண்டியது தான். மண்ணின் தரம் ஏற்படுவது என்பதை விவரமாய்ச்சொல்கிறேன். ஸாதாரணமாய் ஸமுத்திர ஓரத்து நிலங்கள் நீங்கலாக மற்ற நிலங்களின் மண் கரிசல் அல்லது செவ்வலாயிருக்கும். ஒவ்வொன்றிலும் களி, மிசிரம், மணல் என்று மூன்று வகுப்புகள் உண்டு. ஆகையால் ஆறுவகுப்புகள் ஏற்படுகின்றன—III-வது வகுப்பு கரிசல்களி, IV வது கரிசல்மிசிரம், V-வது கரிசல்மணல், VI-வது செவ்வல்களி, VII-வது செவ்வல் மிசிரம், VIII-வது செவ்வல்மணல். இந்த ஜில்லாவில் தரம் ஏற்படுத்தின உத்தியோகஸ்தர்கள் தஞ்சாவூர், கும்பகோணம், மாயவரம், நன்னிலம் ஆகிய நீராரம்ப தாலூகாக்களில் நிலங்கள் காவேரியாலும் அதில் பிரியும் ஆறுகளாலும் கொண்டுவரப்படும் வண்டல் மண்ணினால் பிரதிவருஷமும் செழிப்புப்படுத்தப்படுகின்றனவென்றும், வழக்கமானகரிசல் அல்லது செவ்வல் வகுப்புகளில் அந்த நிலங்களை எடுப்பது ஸாத்தியப்படாதென்றும், அவைகளின் விசேஷமான உரத்தை உத்தேசித்து அவைகளை உயர்ந்த வகுப்புகளில் சேர்க்கவேண்டியதென்றும் அபிப்பிராயப்பட்டார்கள். I-வது வண்டல்களி என்றும், II-வது வண்டல் மிசிரமென்றும் இரண்டு புது வகுப்புகள் ஏற்படுத்தினார்கள். ஒவ்வொன்றிலும் ஐந்து உள்வகுப்புகள் உண்டு. இரண்டாவது உள் வகுப்பைக்காட்டிலும் முதலாவது உயர்ந்தது. மூன்றுவதைக் காட்டிலும் இரண்டாவது உயர்ந்தது. மற்றவைகளும் இப்படியே. அந்தக்காலத்தில் பெரும்பான்மையான நிலங்கள் அவைகளின் யோக்கியதைக்குமேல்பட்ட வகுப்புகளில் எடுக்கப்பட்டதாக நிலமுள்ளவர்கள் முறையிட்டார்கள். இதையனுஸரித்து நம்கவர்னருடைய ஆலோசனைஸபையிலுள்ள ஜனப்பிரதிநிதியான மெம்பர்களும் அனேக கேள்விகள் கேட்டார்கள். ஆனல் பலான கிராமத்தில் அல்லது கிராமஸமூகத்தில் கண்டு முதலை எடுத்துக்காட்டி யோக்கியதைக்குமேல்பட்ட வகுப்புகளில் நிலங்கள் வாஸ்தவமாக எடுக்கப்பட்டிருப்பதாக இதுவரையில் காண்பிக்கப்படவில்லை. அதாவது, இரண்டாவது வகுப்பு, முதலாவது உள் வகுப்பு, நஞ்சை நிலத்துக்கு கண்டு முதல் ஏகரா 1-க்கு 1150 பட்டணம்படி நெல்லு என்றும், அதே வகுப்பில் இரண்டாவது உள் வகுப்பு நிலத்திலும்

முதலாவது வகுப்பு முதலாவது உள் வகுப்பு நிலத்திலும் கண்டுமுதல் 1000 படியென்றும் மாசூல்களை அறுவடைசெய்து ஸெட்டில் மெண்டு உத்தியோகஸ்தர்கள் கண்டு கொண் டிருக்கிறார்கள். தன்னுடைய நஞ்சைநிலம் இரண்டாவது வகுப்பு முதலாவது உள் வகுப்பிலாவது இரண்டாவது உள்வகுப்பிலா வது இருக்கக்கூடாதென்று சொல்லுகிற ஒரு வன் வாஸ்தவ கண்டு முதல் 1150 படிக்கும் 1000 படிக்கும் குறைந்திருக்கிறதென்று காண்பிக்கவேண்டும். இவ்விதமானருஜு இது வரையில் காணோம். இந்தக்குறையை அடுத்த ஸெட்டில்மெண்டில் நிவர்த்திசெய்ய வேண்டும். அதற்காக நிலக்காரர் ஒவ்வொ ருவரும் பைண்டு செய்து பக்கங்கள் நம்பர் போடப்பட்ட புஸ்தகத்தில் தம்முடைய எல்லா நஞ்சை நிலங்களின் கண்டு முதலைக்காட்டும் கணக்கு இந்த வருஷம் முதல் வைக்கவேண் டும். கண்டு முதலில் அறுப்பாள் கூலியையும், போரடிநெல்லையும், வேலையும், சேர்க்கவேண் டியது. முதலாவது ஐடெம் ஸாகுபடிச்செ லவில் சேர்த்திருப்பதால் கண்டு முதலில் அதைவிட்டுவிடக்கூடாது. ஒவ்வொரு வய லுக்கும் அல்லது அதின் தனிபாகமான லெட் டருக்கும் ஒரு பக்கம் விட்டு அதின் தலையில் அந்த வயலின் ஸர்வே நம்பர், அதின் லெட் டர், ஏகராஸெண்டில் அதின் விஸ்தீர்ணம் அதின் வகுப்பு உள் வகுப்பு தரம் இவைகளை எழுதவேணும். கீழே பிரதிவருஷமும் முதலா வது போகத்தின் மொத்தக்கண்டு முதலையும் இரண்டாவது போகத்துக் கண்டு முதலையும் எழுதி, அந்தவயலுக்குப் போட்ட எருவின் விலையை, மாட்டுச்சாணி, சாம்பல்,பிண்ணாக்கு, ஆட்டுக்கிடை, பசுந்தாள் எரு என்ற விவரத் துடன் குறித்துவைக்கவேணும். எருவிஷய மான விவரம் நிலத்தை கூடியவரையில் நல்ல லாபம் கிடைக்க நன்முயற்சிசெய்து ஸாகுபடி செய்ததாகக்காட்டவேண்டியதற் காக இந்த ஸெட்டில்மெண்டில் பாக்கியிருக் கும் 12 வருஷஸராஸரி கண்டுமுதலை இவ்வித மாகத் தெரிந்துகொண்டு ஸெட்டில் மெண்டு டிபார்ட்டுமெண்டு எடுத்துக்கொண்டிருக்கும் கண்டு முதலில் காலஸ்திக்காக 100க்கு 15குறைத்து மிகுதியாகும் தொகையுடன் நம்மு டைய கண்டு முதலை ஒத்துப்பார்க்கவேண்டும். நம்முடைய கண்டு முதல் ஸெட்டில்மெண்டு கண்டு முதலுக்கு மேல்படுமானால், நமக்கு ஒருவிதகெடுதலும் செய்யவில்லையென்று நாம் திருப்தியை அடையலாம். கண்டு முதல் குறைவாயும் நமக்கு விரோதமாயிருந்தால், ஸெட்டில் மெண்டை புதிது செய்யவரும் உத் தியோகஸ்தரிடம் நம்முடைய குறையை ஸரி யாய் நாம் தெரிவித்துக்கொள்ளவேணும். அப் போது அவர்நிலத்தின் தரத்தைக்குறைப்பார். அல்லது வேறு எவ்விதமாயாவது புது ஸெட் டில் மெண்டில் ஏற்படும் தீர்வையை உசித மாய் குறைக்கலாம். இது எப்படியானாலும் தரத்தை உயர்த்தாதபடி நாம் தடைசெய்ய லாம். தரத்தை உயர்த்தவும் இடமுண்டு. ஸெட்டில் மெண்டு செய்தகாலத்தில் மிராசு தாரர்கள் செய்துகொண்ட புகாரைவிசாரிக் கையில் ரிவினியூபோர்ட்டும் கவர்ன்மெண்டா ரும் ஒருவாறு புகார்செய்தது நியாயமென்றும் ஸெட்டில்மெண்டில் வழக்கமில்லாத வண்டல் வகுப்புகள் ஏற்படுத்தினதில் கும்பகோணம் நன்னிலம் மாயவரம் தாலுகாக்களில் தீர்வை முறையே 100க்கு 48, 46, 34 பங்கு உயர்ந்து விட்டதென்றும் தெரிந்துகொண்டு இந்த மூன்று தாலுகாக்களிலும்தரத்தைக்குறைத்து தீர்வையை குறைக்கவேணுமென்று ரிவி னியூபோர்டாரின் சிபார்சை பூராவாக கவர்ன் மெண்டார் ஒப்புக்கொண்டார்கள். அப்படியே

முதலாவது உள் வகுப்பை இரண்டா வதாகவும், இரண்டாவதை மூன்ருவதாகவும் இப்படியே மற்றவைகளையும் குறைத்து தீர் வையையும் குறைத்தார்கள். பன்னிரண்டு வருஷம் கழித்து புதுஸெட்டில் மெண்டாகும் காலத்தில் போர்டாரும் கவர்ன்மெண்டாரும் வேறு அபிப்பிராயம்கொண்டு, ஒரே காலத் தில் மிகவும் அதிகமாக ஏற்படும் தீர்வை யைக்குறைப்பது உசிதமாளுலும் அப்படிக் குறைத்ததைகெடுகிலும் ஒப்புக்கொள்ளவேண் டியதில்லை யென்று சொல்லலாம். அவர் கள்னியில் இன்னம் இரண்டு அதிகாரிகளு க்கு நாம் திருப்திசெய்யவேண்டியது. அதா வது இந்தியா கவர்ன்மெண்டு, மகாராஜாவின் இந்தியாமந்திரி. ஆகையால் ஆதிமுதல் நாம் புகார்செய்தது ஸரியாளுல், அதைருஜுப் படுத்தநாம் தயாராயிருக்கவேண்டும். மேலே சொன்னபடி கணக்கு வைப்பதில் பொய்க் கணக்குகூடாதென்றுசொல்லவேண்டியதில்லை. பொய்க்கணக்கு எழுதுகிறவன் தன்னையும் மற்றவர்களையும் கெடுக்கிருன்.

2. இந்தஸந்தர்ப்பத்தில்பயித்தியம்பிடித்தவர் களைப்போல் நிலத்தில் போய்எல்லாரும்விழு வதை கவனிக்கவேண்டியது. இது 1906 ஸு அக்டோபர்ஸ்ரீ அர்பத்நட்டுகம்பெனிமுறிந்தது முதல் நடந்துக்கொண்டு வருகிறது. அதற்கு முன்னும் நீண்டகாலமான அராஜகத் தால் ஒருவரைஒருவர் அதிகமாய் நம்பவில்லை. அதின் பிறகு ஜனங்களுக்கு பயமுண்டாய் என்ன விலை கேட்டாலும் நிலம்வாங்குகிற தென்று கொஞ்சம் பணம் மீத்தி வைத்துக் கொண்டிருப்பவர் ஓடித்தேடிக்கொண்டிருக் கிருர்கள். இதிளுல் என்ன ஏற்பட்டது? இந்த ஐந்து வருஷத்தில் நிலவிலை ஒன்றுக்கு இரண்டாய், ஒரு குழி நஞ்சைநிலம் ஒரு ரூபாயாய் இருந்தது இப்போது இரண்டு ரூபாயாயிருக்கிறது. இப்படி விலை உயர்ந்த தால் நிலவரும்படி என்னமாயிருக்கிற தென்று பார்க்கவேணும். விசேஷ தரத்தை யும் அதற்கு அடுத்த இரண்டு தரத்தையும் விட்டு மூன்ருவது தரம் நிலங்களை எடுத்துக் கொள்ளுவோம். இவைகளுக்கு கண்டு முதல் ஏகரா 1-க்கு 900 பட்டணம் படிநெல் என்று ஏற்பட்டிருக்கிறது. காலஸ்திதிக்காக 100-க் கு 15 தள்ளவேண்டியது. இதைக்கழித்தால் ஸராஸரி ஏகரா 1-க்கு 765 படி கண்டு முதல் ஆகவேணும். ஒரு கலத்துக்கு $27\frac{3}{5}$ பட்டணம் படியானதால், இது 27 கலம் 9 மரக்காலா கிறது. ஸாகுபடிச்செலவு என்று ஏகரா 1-க்கு ரூ 11 குறைத்திருக்கிருர்கள். ஸெட்டில்மெண்டில் ஏற்பட்டபடி கலம்1-க்கு விலை ரூ 1—0—8. இந்த விலைப்படி ஸாகு படிச்செலவு 10 கலம் 6 மரக்காலாகிறது. இதை நீக்கி குடியும் கவர்ன்மெண்டாரும் பாகம் செய்துக்கொள்ளவேண்டியது 17கலம் 3 மரக்கால். இதிலிருந்து ரூ 9 தீர்வையும் 9 அணு ரோட்டுவரியும் நாம் கொடுக்கிருேம். ஒரு ஏகரா விலை ரூ 300 இருந்தகாலத்தில் நமக்கு ரூ 8—7—0 வரும்படி வந்தது. அதாவது 100-க்கு $2\frac{3}{4}$. கொஞ்சகாலமாய் நெல் விலை உயர்ந்திருப்பதால், கலம் 1-க்கு ரூ 1—8—0 ஆக, ஒரு ஏகராவில் வரும்படி ரூ 16—9—0 அல்லது 100 க்கு $5\frac{1}{2}$. நிலம் விலை இரட்டித்திருப்பதால் வரும் படி 100க்கு $2\frac{3}{4}$ ஆகிவிட்டது. அடுத்த ஸெட் டில் மெண்டில் என்னமாகும் என்று விசாரிக் கவேணும். இப்போது இருப்பது போல் நெல் விலை யிருந்தால் ஸராஸரி கலம் 1 க்கு ரூ 1—8—0 க்குக் குறையாது. வியாபாரி லாபத்துக்காக 100 க்கு 10 தள்ளிளுல் ஸெட் டில்மெண்டுக்கு விலை ரூ 1—5—7 ஆகும். இதன்படி 17 கலம் 3 மரக்காலுக்கு விலை

ரூ 23—4—3 ஆகும். புதுத் தீர்வை ஏகரா 1 க்கு ரூ 12 ஆக ஏற்படலாம். தீர்வை ரூ 12-யும் ரோட்டுவரி 12 அணுவையும் தள்ளி வரும்படி ரூ 10—8—0. நிலவிலை ரூ 600 ஆகிவிட்டதால் 100-க்கு $1\frac{3}{4}$ வரும்படிவரும். மேலேசொல்லியதைக்கொண்டு வரும்படிக்காக நிலத்தில் பணம்போடுவது முட்டாள் தனமென்று ஏற்படும்.

3. நிலம்வாங்காமல் நாம் சேர்த்து வைத்திருக்கும் பணத்தைப்போட்டுவைப்பதற்கு ஸரியான இடம்உண்டா? உண்டு. ஐக்கியநாணயச்சங்கங்கள் எங்கும் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. அவைகளில் போடுகிறபணத்துக்கு ஈடுவெகு மேன்மையானது. கிராமச்சங்கங்கள் வாங்கும் கடன்களுக்கு அவைகளில் சேர்ந்த எல்லாமெம்பர்களும் கூட்டாயும் தனித்தனியாயும் ஜவாப்பு சொல்லவேண்டியது. கடன்கள் கொடுபடாமல் நின்ருல் அவர்கள் தங்களுடைய முழுஸொத்தைக்கொண்டும் அவைகளைக்கொடுக்கவேண்டியது. அவைகளின் கணக்குகளை கவர்ன்மெண்டு இன்ஸ்பெக்டர் தணிக்கை செய்கிருர். ரிஜிஸ்ட்ராரும் அவருடன் வேலைசெய்யும் கலெக்டர்களும் அவைகளின் வேலைகள் ஸரியாக நடக்கின்றனவாவென்று பார்த்துவருகிருர்கள். இந்தச்சங்கங்களில் எதிலாவது ஸந்தேகமிருந்தால், அதில் பணம் போடாமல் சென்னைப் பட்டணம் ஸெண்டரல் அர்பன் பாங்கியிலும் ஜில்லாக்களில் ஏற்பட்டும் ஏற்பட்டுக்கொண்டும் வருகிறஸெண்டிரல் பாங்கிகளிலும் பணம்போடலாம். கிராமச் சங்கங்களில் ரூ100-க்கு $7\frac{1}{2}$யும், ஸெண்டரல் பாங்கிகளில் 5 அல்லது 6-ம் வட்டியாகக்கிடைக்கும். இப்படி ஐக்கிய நாணயச்சங்கங்களில் பணம்போடும்படிசொல்வது பணமுள்ள ஜனங்களுடைய பிரயோஜநத்துக்காக மாத்திரம் அல்ல. நல்ல வேலை செய்கிற இந்த சங்கங்களுக்கு உதவிசெய்யும் பொருட்டாகவுந்தான். பணம் சேர்த்து வைத்திருப்பவர்களுக்கு அதைப் போட்டுவைக்க இடம் ஏற்படுத்திக்கொடுப்பதால் செட்டை ஷை சங்கங்கள் விர்த்திசெய்கின்றன. கடன் வாங்கினவர்களுக்கு தள்ளிக் கொடுக்கும்படி கேட்க இடங்கொடாமல் கடனை ஸரியானவழியில் விநியோகித்து ஸரியான காலத்தில் அதைத் திருப்பிகொடுக்கும்படி நிர்பந்தம் செய்வதாலும் ஒவ்வொருவனையும் தன்னையே நம்பும்படி செய்கின்றன. ஒருவருக்கு ஒருவர் ஜாமீனுயிருக்கும்படி செய்வதால் ஒத்துமையை உண்டுபண்ணுகின்றன. ஸரியான காலத்தில் கடனைத்திருப்பிக்கொடுக்கும்படி கேட்பதால் எங்தெந்த வேளையில் எதைச் செய்யவேணுமோ அதைச்செய்யும் குணத்தைக் கற்பிக்கின்றன. மேலும் மெம்பர்களை ஜாக்கிரதையாய்ப்பொறுக்கி எடுப்பதாலும் சங்கங்களில் வாங்குகிறகடனை ஸரியாய் விநியோகம் செய்கிருர்களா என்று ஒவ்வொருவரும் மற்ற மெம்பர்களை கவனித்துப் பார்ப்பார்களானதாலும் சோம்பேறிகளை சுறுசுறுப்பு உள்ளவர்களாகவும், பணத்தை வீண் செலவு செய்கிறவர்களை செட்டுள்ளவர்களாகவும், திருடனையும் காலாடிகளையும் யோக்கியர்களாகவும், கௌரவமுள்ளவர்களாகவும், செய்கின்றன. ஆகையால் நம்முடைய தேசம் நன்ருயிருக்கவேணுமென்ற எண்ணமுள்ளவர்களுக்கு ஐக்கியநாணயச் சங்கங்களில்லாத இடத்தில் அவைகளை ஏற்படுத்துவதையும் ஏற்பட்டு இருப்பவைகளுக்கு பொருளுதவி செய்வதையும்விட மேன்மையான வேலை இருப்பதாகத் தெரியவில்லை.

வி. கே. ராமானுஜாசாரி.

## BETEL CULTIVATION.

BY

S. SAMBASIVA AIYAR.

## வெற்றிலை ஸாகுபடி.

---

எந்த தேசத்திலும், எந்த ஜாதியாரும், ஸ்திரீ, புமான், பாலர், விருத்தர், தோட்டி, தொண்டிமான் எல்லாரும் அதிகப் பிரியத்துடன்வெற்றிலையை, அவரவர்களுடையயோக்கியதைக்குத் தக்கபடி, பாக்கோடு வாஸனை ஸாமான்களாகிய ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், பத்திரி, வால்மிளகு, சேர்த்து சுண்ணாம்பு தடவி, நரம்பைக்கிழித்து, சாப்பிட்டவுடன் போட்டுக் கொள்ளுகிறதை நாமெல்லோரும் பார்க்கிறோம்.இன்னும் சில ஏழையானவர்கள் வெற்றிலை அகப்படாத பக்ஷத்தில், வெற்றிலையின் நரம்பையாவது எடுத்துப் போட்டுக் கொள்ளுகிறார்கள். அதனால் ஜனங்கள் வெற்றிலையில் எவ்வளவு பிரமை வைத்திருக்கிறார்களென்பது வெளிப்படுகிறது.

இதை இந்தியாதேசம் முழுவதும் பயிர் செய்கிறார்கள். இதர தீவாந்திரங்களிலுமுண்டு.

வெற்றிலை ஒரு மருந்துச் சரக்காகவும் உபயோகப்படுகிறது. இதற்கு ஜீரணசக்தி, குரலை இனிமைப்படுத்தும் குணம், வாய் நாற்றத்தைப் போக்கும் படியான சக்தி, இவைகளுமுண்டு. மாடுகளுக்கு அஜீரணமாயிருக்கிறது தெரிந்தால் பெருங்காயத்துடன் சேர்த்துக் கொடுக்கிறதுண்டு.

இதற்கு நல்ல வடிகால் வஸதியுள்ள, பாதி மணல் பாதி களி ஸம்பந்தமுள்ள பூமியும், களிமண் பூமியும், சிலாக்கியம். புன்செய் நிலத்தை விட இருமண் பாடான நன்செய் நிரம்பத்திரம். உரப்பான களியிலும் பயிராகும்.

இந்த தஞ்சாவூர் ஜில்லாவில் மகமதியர்கள் இதை ஏராளமாக ஸாகுபடி செய்கிறார்கள். இந்த ஜில்லாவில் மட்டும் இதர ஜாதியார் ஸாகுபடி செய்கிற வழக்கமில்லை. திருநெல்வேலி திருச்சினாப்பள்ளி இவ்விடங்களில் எல்லா ஜாதியாரும் ஸாகுபடி செய்கிறார்கள். செங்கல்பட்டு முதலான இடங்களில் முதலிமார்கள் ஸாகுபடி செய்கிறார்கள்.

ஒரு ஏகர் நிலத்தை 450 பட்டங்களாய்ப் பிரிக்கிறார்கள்.ஒருபட்டத்து 1-க்கு 12 அடி நீளமும் $5\frac{1}{4}$ அடி அகலமுமிருக்கும். இந்தப்பட்டங்களுக்கு மத்தியில், 2 அடி ஆழமும் $1\frac{1}{2}$ அடி அகலமு முள்ள கன்னிக்கால் ஓடும். ஒவ்வொரு பட்டத்திலும் ஒரு பெரிய வரப்பு பிரிக்கப்பட்டிருக்கும்.

ஆவணி அதாவது ஆகஸ்ட் மாதத்தில் இந்த வரப்பை நன்றாய் மெழுகு பதமாய் மணியாசி செய்து விடவேணும். இதற்கு ரூ15-0-0-செலவு பிடிக்கும். பிறகு 18 பட்டணம் படி அகத்தி விதையை $1\frac{1}{2}$ அங்குல குழி தோண்டி 6 அங்குலத்துக்கு மத்தியில் 4-5-விதை போட்டு விடவேண்டும். 5-6 நாளைக்குள் முளை கண்டுவிடும். விதை போட்ட 15 நாள் வரையில் தண்ணீர் இறைக்கவேண்டும். பிறகு காலையில் பனி ஜலம் தங்காமல் தண்ணீர் தெளித்து வரவேணும். இவ்விதம் கொடிக்காலுக்கு தண்ணீர் இறைக்கிற கருவிக்கு ஊற்றுப்பட்டை என்றுபெயர். அது 2. அடி நீளமும் 9 அங்குல அகலமும் 6 அங்குல ஆழமுமுள்ளதாயிருக்கும். இதன் மத்தியில் ஒரு கைபிடிக்கயிறு கட்டி ஒரு கோடியில் மற்றொரு கையால் பிடித்துக் கொண்டு கன்னியிலிருக்கிற ஜலத்தை இரண்டு காலுக்கும் மத்தியில் பட்டையால் இறைக்கவேண்டும். இதில் ஜலம் இறைக்கிறவனுக்கு ஸமார்த்தியம் வேணும். இல்லாத பக்ஷத்தில் ஊற்றுப்பட்டை காலைப்

பெயர்த்துவிடும். விதைபோட்ட 3 மாதத்துக்குள் அகத்தி ஒரு முழப்பயிராகி விடும். 3மாதமானவுடன் அதாவது நவம்பர்மாதக் கடைசிக்குள் இதற்கு முந்தி ஒருவருஷமான வெற்றிலைக் கொடியில் நுனிக்கொடி 7 கணுவிலும், பாக்கிக்கட்டையில் 3 கணுவிலும், கொடி அறுத்து மேலே சொன்ன 2 அகத்திக்கட்டை மத்தியில், 2 கொடி, எடுத்து ஒன்றுக் கொன்று தண்டாமல், தண்ணீர் இறைத்துமெழுகு பதம் பண்ணி யிருக்கிற வரப்பில், கொடிகளைப் புதைத்து, காயாமலிருக்க வைக்கோலால் மூடி வைக்கவேணும். கட்டு 1-க்கு 230 கொடிகளடங்கிய 225 கட்டுகள் ஒரு ஏகருக்குப் போதும். அகத்தி விதையின் கிரயம் ரூ 18-0-0 பிடிக்கும். கொடியின் கிரயம் ரூ 75-0-0 பிடிக்கும். அகத்திவிதை போட்ட 45 ஆள்களுக்கு கூலி ரூ 14-10 ம், கொடி தட்டுகிற வரையில் அதாவது வெற்றிலைக் கொடியைப் புதைக்கிற வரையில் தண்ணீர் இறைக்க கூலி ரூ14-0-0ம், கொடிதட்ட 60 ஆளுக்கு ரூ 18-12-0ம். கொடி தட்டிய பிறகு 15 நாளைக்கு விடாமல் தண்ணீர் இறைக்கக் கூலி ரூ 3-0-0-ம், பிறகு 4 மாதம் வரையில் ரூ 6-12-0, ஆக மேல்காட்டிய விவரப்படி ஒரு ஏகர் (3மா) நன்செய் நிலத்தில் கொடிப்பயிராகிறவரையில் கொடிக்கால் ஸாகுபடி செய்யப்பிடிக்கும்செலவு ரூ 164-2.

பிப்ரவரி மாதம் முதல் அகத்திக் காலில் கொடியை படரும்படி கோரையால் கட்டவேணும். இவ்விதம் கட்டியவுடன் சாம்பலும், சாணி எருவும் கலந்து நன்றாய்க் காய்ச்சல் போட்டு $\frac{1}{4}$ படி எருவை ஒவ்வொரு அகத்திக் காலுக்கும் வைக்கவேணும். பிறகு கிடங்கிலிருக்கிற சேற்றை எடுத்து நன்றாய் எரு மறையும்படி மணியாசி செய்யவேணும். கொடிகள் வளர வளர சாயாமல் கோரையால் கட்டிவந்து ஸுமார் அகத்திக்கால் 10 அடி உயர்ந்தவுடன் பாளையால் மேல்விட்டம் போட்டு கட்டி விடவேணும். கொல்லையைச் சுற்றி, பயிர் காற்றில் அடிபடாமலிருக்கவும் பிறர் கண்படாமலிருக்கவும், நன்றாய் 15 அடி உயரத்துக்கு கீற்றால் மறைவு கட்டவேணும்.

| | |
|---|---|
| ஷை எருவைக்கவும், விட்டம் கட்டவும் கொடி கட்டவும் கூலி ரூ | 20-0-0 |
| கீற்று 1200-க்கு கிரயம் ரூ | 11-4-0 |
| ஷை கூலி ரூ | 4-11-0 |
| எருகிரயம் சுமார் 4 தடவைக்கு 15 வண்டி வீதம் வண்டி 60-க்கு வண்டி 1-க்கு ரூ 0-8-0- வீதம் ரூ | 30 0-0 |

மேலெழுதிய செலவு, அன்னியில் குறைந்தது மழைத்தண்ணீர் ஒற்றுக் கொண்டால் வருஷம் $2\frac{1}{2}$-க்கு வாரம் 1-க்கு 1 நாள் வீதம் தண்ணீர் பாய்ச்சக் கூலி ரூ 60-0-0. கொல்லைக்காரருக்கு வருஷம் 1-க்கு பகுதி ரூ 60-0-0. வீதம் மூன்று வருஷத்துக்கு ரூ 180 0.0. ஒரு ஏகர் நிலத்தில் கொடிக்காலுக்குச் செலவு மொத்தம் ரூ 471-1-0.

இத்துடன் வாழை, கத்திரி, இவைகளை மத்தியிலும், சுற்றுக்காலில் பருத்தி (பூணூல் பருத்தி) கொட்டைமுத்து, வேலிக்குசெம்பை சவண்டை இவைகளையும் பயிர் செய்கிறது வழக்கம்; ஷை வேலிப் பயிரின் தழைகள் ஆட்டுக்கு தீவனமாகும்.

ஆகஸ்டு மாதம் போட்ட அகத்தியில் மறு மார்ச்சுமாதம் முதல் கீரைகிள்ள ஆரம்பிக்கலாம். அவ்விதம் அகப்படக் கூடிய கீரை ஸராஸரிக்கு மீ 1-க்கு ரூ 12 வீதம் இரண்டரை வருஷத்துக்கு விலைபோகும். அதாவது $2\frac{1}{2}$ வருஷத்தில் கீரை யால் கிடைக்கக் கூடியது ரூ 360-0-0. ஷை கழி ஸுமார் 1000 வரையில் கொடிக்கால் அழிக்கும் காலத்தில் அகப்

படும். கொட்டகை போட இது நல்ல உறுதியும், ஒழுங்காயுமிருக்கும். இந்த 1000 கழிகளையும் குறைந்தது ரூ 125-0-0-க்கு விற்கலாம். இகர வாழை கத்திரியிலிருந்து ரூ 150-0-0-க்கு மேல் கிடைக்கும்.

டிஸம்பர் ௴-த்தில் தட்டிய கொடிகளை அடுத்த ஆகஸ்டு ௴-முதல் வெற்றிலை கிள்ள ஆரம்பிப்பார்கள். அந்த வெற்றிலைக்கு "கமார்" என்றுபெயர். இது போட்டுக் கொள்ளுகிறதற்கு நன்றாயிருக்கும்.

இதைத்தான் இளசு என்று சொல்லுகிறது. டிஸம்பருக்குப் பிறகு கிள்ளும் வெற்றிலைக்கு "ஆசல் என்றுபேர். இது நன்றாயிராது. இரண்டு வருஷத்துக்கு மேல்பட்ட வெற்றிலைக்கு "முதுகால்" என்றுபெயர். கமார் சிலாக்கியம். "ஆண்" வெற்றிலை என்றும் சொல்லுகிற துண்டு. ஒரு வருஷத்துக்குப் பிறகு வேறு இடத்தில் கொடிபோட அறுத்தகட்டையில் முதல் விளைகிற வெற்றிலைக்கு "மார்" என்றுபெயர். இதை ஒருமாதம் வரையில்" கரும்பு" என்று சொல்லுகிறதுண்டு. இதுதான் தகுந்த சிலாக்கியமான வெற்றிலை. இது அகப்படுகிறது கஷ்டம். $2\frac{1}{2}$ வருஷக் கொடிக்காலில் கொடி 1க்கு 2-3 வெற்றிலைக்கு மேல் அகப்படாது. இந்த 100 வெற்றிலையை (கவுளியை) தெரிந்தவர்கள் இரண்டணுவுக்கு மேல் கொடுத்து வாங்குவார்கள்." கமார் வெற்றிலைக் காம்பு வெள்ளையாயும், நரம்பு அதிகமாயும், மெதுவாயும், மெல்லியதாயும், நீட்டமாயுமிருக்கும். "ஆசல்" காம்பு, சிகப்பு மஞ்சள் கலந்ததாயும் தடிப்பாயும் நொரப்பாயு மிருக்கும்.

சுமார் $2\frac{1}{2}$ ஷு-த்தில் ௴ 1-க்கு 30-துண்டு வெற்றிலை கிடைக்கும். துண்டு 1-க்கு ஸராஸரி ரூ 0-12-0 வீதம் 675-0-0 கிடைக்கும். துண்டு 1-க்கு 2000வெற்றிலை வீதம் கணக்கு. பருத்தியில் ரூ 10-0-0 கொட்டை முத்தில் ரூ 9-0-0. கிடைக்கும்.

வௌவால், கிளி அணில் இவைகள், நெளியன் என்கிற ஒரு பூச்சி, அகத்தியில் விழுந்து கொடிக்காலை அதிக சேதப்படுத்திவிடும். நெளியன் விழாமல் செய்பபனி ஜலத்தை தட்டிவரவேணும். காற்றால் அதிக சேதம். வௌவாலை தடுக்கசுற்றி வலைகட்டினால் அகத்திவிதை எடுக்கலாம். ஆனால் இது ஸாத்தியமல்ல.

அகத்திவிதை இவ்விடங்களில் அகப்படுகிறதில்லை. இதை திருநெல்வேலி ஜில்லாவிலிருந்து கிராக்கியாய் விலை கொடுத்து வாங்கி வருகிறார்கள். சென்ற 2 வருஷமாய் பட்டணம் படி விதை ரூ 2-0-0. கொடுத்து வாங்கி வருகிறார்கள். சிலஸமயத்தில் இதுவே ரூ 5-வரையில் விற்கப்படுகிறது.

அகத்தித்தழை நன்செய் நிலத்துக்கு நல்ல எரு. கொடி அழிந்த பிறகு ஸாகுபடி செய்திருக்கிற நன்செய் நிலத்தையும் அதோடுகூடயிருக்கிற நன்செய் நிலத்தையும் பார்த்தால் இது நல்ல எருத்தான் என்பது தெரியும்.

ஒரு ஏகர் நிலத்தில் கிடைக்கக் கூடியது ரூ1335-0-0. அதில் செலவுரூ471-1-0. பாக்கி லாபம் வருஷம் 3-க்கு ரூ963-15. இருக்கிறது.

இனியாவது நம்முடைய மிராசுதார்களும் குடிகளும், கிருஷியில் கவலை யெடுத்துக் கொண்டு பார்த்தால் நமக்கும் நம்முடைய ஏழை ஜனங்களுக்கும் பசியார" பிழைக்கும் வழி" கிடைக்கும்.

கொடிக்கால் ஸாகுபடியை எவரும் ஏகதேசத்தில் செய்கிறதில்லை. பலர் சேர்ந்து செய்கிறது வழக்கம். எவரும் இதை செய்யலாம்.

எஸ். சாம்பசிவன்.

## GALL NUT.

BY

C. K. NARAYANASWAMY MUDALIAR.

## கடுக்காய்.

பெல்ஜியம் தேசத்தில் உற்பத்தியாகும் கடுக்காயைப்பற்றி சென்ற இரண்டு மூன்று வருஷங்களுக்கு முந்தி நமது கவர்ன்மெண்டார் அதன் காய்களையும், அவைகளில் உற்பத்தியாகும் எண்ணெயையும் இந்தியாவில் வர்த்தகத்தில் உபயோகப்படுத்தக்கூடுமாவென்று பரிக்ஷை செய்துகொண்டுவந்ததாக ஞாபகம். முடிவு என்னவாயிற்றென்பது மட்டும் விளங்காமலிருக்கிறது.

கடுக்காயின் உபயோகத்தைப்பற்றி நாமறிந்த இரண்டொரு விஷயங்களை நமது விவஸாய நண்பர்கள் உணரும் பொருட்டு இங்கு வெளியிடுகிறோம்.

கடுக்காய் மரங்களை ரோட்டோரங்களில் சாலை மரங்களாக வளர்ப்பது நலமென்று காணுகிறது. சென்னை ராஜதானியில், நீலகிரி, ஆனைமலை, வெள்ளியங்கிரி, ஸத்தியமங்கலம் முதலான இடங்களிலும், வைனாட்டிலும், திருவாங்கூரிலும் அது மிக செழிப்பாகவளர்க்கிறதாகத் தெரிகிறது. ஆனால் தென்னிந்தியாவில் இதன் காய்களினால் எண்ணெய் செய்கிறதற்கு எவ்வித ப்ரயத்தினம் செய்து வருகிறார்களென்பது அறியக்கூடாமலிருக்கிறது. பர்மாவில் "கெங்கெங்" என்ற ஊரிலுள்ள பௌத்தமதக் கோயிலின்பக்கத்தில் கடுக்காய் மரத்தோப்பு ஒன்றிருக்கிறது. அங்கே இந்தக் காய்களிலிருந்து கீழ்க்காணுமாறு எண்ணெய் செய்கிறார்கள் :—

முதலில் காய்களை உரலிலிட்டு நன்றாக இடித்து தூள் செய்து அந்தத் தூள்களை ஓர் பாண்டத்திற் கொட்டி நன்றாக வேகவைத்து அதனுடன் லிங்கம் என்ற செந்தூரத்தைச் சேர்க்கிறார்கள். இவையெல்லாம் ஒன்றாகக் கலந்து நன்றாக வெந்த தைலத்தை தக்க பதத்தில் இறக்கிவைத்துக்கொண்டு கோயில்கள் வீடுகளிலுள்ள தூண் முதலானவற்றிற்கு வர்ணமாக உபயோகித்து வருகிறார்கள். கடுக்காய் ரஸத்துடன் திப்பியைச்சேர்த்து தட்டுகள், பெட்டிகள் முதலிய ஸாமான்களுக்கு வர்ணம் பூசிவருகிறார்கள். பார்வைக்கும் நன்றாயிருக்கிறது.

கடுக்காய் மசி (இங்கி) செய்வதற்கும், நமது நாட்டு வைத்தியர்கள் செய்யும் மருந்துவகைகளுக்கும், தோல் பதனிடுவதற்கும் உபயோகப்பட்டு வருகிறது. இக்கடுக்காய்ச் செடிகளை வளர்க்கிறதற்கு கீழ்க்கண்ட குறிப்புகள் உபயோகமானவை :—

பூமியில் விதைப்பதற்கு 5 வாரத்திற்கு முந்தியே விதைகளை தண்ணீரில் நன்றாக ஊரவைத்து வைக்கோலைக்கொண்டு நேர்த்தியாக மூடிவைக்கவும், சுமாரான ஆழமும் சதுரமுமான குழிகளில் 25 அடி முதல் 30 அடி தூரம் வரையில் விதைகளை நட்டுவைத்தால் செடிகள் முளைகிளம்பி ஓங்கிவளர்ந்து நல்ல பலனைத்தரும். மரம் நன்றாக வளர்வதற்கு பூமி மிகவும் செழிப்பாக இருக்கவேண்டும். நட்டு வைத்த விதைகள் 100-க்கு 60. 66, பங்கு வரையில் தேரும், கடுக்காயின் பச்சை எண்ணெய் குழம்பாயும் வாஸனையாயுமிருக்கும். நமது ஆங்கில அரசாட்சியின் ராஜஸ்தானமாகிய லண்டனில் இந்த எண்ணெயும் காயும் நன்றாக வியாபாரமாகலாம். நமது நாட்டு வியாபாரிகள் கவனிப்பது நலம்.

சி. கு நாராயணசாமி முதலியார்.

## SELECTIONS.
## விசேஷத்திரட்டு.

### DEFENSIVE WEAPONS OF ANIMALS.
### ஜந்துக்களுக்குள்ள சில அற்புதமான ஆயுதங்கள்.

உலகத்தில் பலஹீனமான ஜந்துக்கள் தங்கள் பல சாலிகளான விரோதிகளினின்றும் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகப் படைக்கப் பட்டிருக்கும் ஆயுதங்கள் கவனிக்கத்தக்கவை.

மாம்ஸ பக்ஷிணிகளாகிய பெரும் ஜந்துக்களுக்கு இருக்கும் ஆயுதங்கள் அதிக பலமுடையனவாயிருப்பதால், அவைகள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வேறு ஆயுதங்கள் அவசியமன்று. ஆனால் ஹீனப்பிராணிகளுக்கு அவைமிகவும் அவசியமானதால், அவைகளிடம் காணப்படுகின்றன.

சிங்கம், புலி, சிறுத்தை, ஓநாய், இவைகள் அதிக குரூரமான பற்களையும், பயங்கரமான நகங்களையும் கொண்டுள்ளன. கழுகைப்போன்ற பக்ஷிகள் தங்கள் இரைகளைக் கால் நகங்களால் பிடித்துக்கொண்டு, மூக்கால் கொத்தித் தின்னுகின்றன. சுறுமீன் தன் நீண்ட கத்திபோன்ற முகத்தால் ஒரு மனிதனைக் கூட ஓரடியில் துண்டிக்கச் சக்தி கொண்டது. "அக்டோபஸ்" என்னும் ஒருவித ஜந்து இதேமாதிரியாகத்தான் இரையைப் பாம்புகளைப்போன்ற தன் கால்களால் பிடித்துக்கொண்டு, இரத்தத்தை ஒட்ட உறிஞ்சிவிடுகின்றது. இப்படிப்பட்ட மாம்ஸபக்ஷிணிகளே உலகத்தில் ஒன்றுமில்லாமல் செய்துவிடப் போதுமானவைகள். ஆனால் அப்படி நடக்காததற்கு காரண மென்ன? முதலாவது, இந்த ஜந்துக்கள் அதிகமாகக் குட்டிகள் போடுவதில்லை. இரண்டாவதாக, அவைகளுக்கு இரைகளாகும் ஜந்துக்கள் ஏதேஷ்டமாய்க் குஞ்சு பொறிக்கப்படுகின்றன. அதுவுமன்றி, பல விசித்திரமான தற்காப்பு ஆயுதங்களையும் வழிகளையும் அவைகள் படைத்திருக்கின்றன.

"ஸிலென்டிராடா வகுப்பைச்சேர்ந்த ஜலஜந்துக்கள் யாவும், தங்கள் தேகத்தில் ஒருவிதமான சிறிய குழாய்களைப் பெற்றிருக்கின்றன. விரோதியண்டையில் வந்தவுடன் இவைகள் குழாய்களினின்றும், உருண்டையான முட்டை போன்றவைகள் பலவற்றை வெளியிடுகின்றன. இவைகள் எதிரியின் மேல் பட்டவுடன் வெடித்து, இவைகளினின்றும் ஊசிகளைப் போன்ற அம்புகள் வெளிக்கிளம்பி, எதிரியைத் தாக்குகின்றன. இவைகள் விஷமுடையவை யாதலால், அதிக வலியை உண்டாக்குவதோடு கூட மனிதனைக்கூடக் கொன்று விடக்கூடியன. மற்றொருவிதமான ஜந்து, தன் தேகத்தினின்றும், ஒரு நீலவர்ணமுடைய திராவகத்தை வெளிவிடுகிறது. இந்த திராவகம் மற்ற ஜந்துக்களின் மேல் பட்டவுடன் அதிக வலியை உண்டாக்கும்.

வண்டு, தேள், கரிவண்டு இவைகளைப் போன்ற கொடுக்குடைய பிராணிகளுக்கு, விஷக்கொடுக்கால் எதிர்க்கும் சக்தி கொடுக்கப் பட்டிருக்கின்றது. கொடுக்குவாய்ப்புறம்இருக்கிறது. இதைக்காப்பாற்ற இரண்டு மூடிகள் இருக்கின்றன. இதற்கு தேகத்திலிருக்கும் இரண்டு பைகளின் வழியாய் விஷம் கொடுக்கப்படுகிறது. தேள்கூடத் தன் வாலின் நுனியி லிருக்கும் கொடுக்கால் கொட்டுகிறது. இந்த வாலானது அதனுடைய வயிற்றைச் சேர்ந்தது. வாலில்லா விட்டால் தேள் ஜீவிப்பதரிது.

சில சிறிய ஜந்துக்கள், (கரப்பு முதலியன) ஒருவிதமான அசுத்தக்காற்றை வயிற்றின் வழியால் வெளிவிடுவதால், தம்மைக் காப்பாற்றிக் கொள்கின்றன. இக்காற்று மற்றப் பூச்சிகளின் மேல் பட்டால் எரிச்சலுண்டாகும். சிலவகுப்பைச் சேர்ந்த ஜந்துக்களில் இக்காற்று ஒரு வெடிபோல் வெளிக்கிளம்பி ஒரு புழுவாகிறது. இந்தப் புழு ஒரு சிறிய துப்பாக்கியாகி விடுகிறதென்று வைத்துக் கொள்ளலாம். இது தன் பகைவனை ஓசையாலும் துர்நாற்றத்தாலும் தோற்கடித்து விடுகிறது.

சிலபுழுக்கள் தங்கள் சத்துருக்களைப் பயமுறுத்துவதால் தப்பித்துக்கொள்கின்றன. "ஸ்டாபிலினஸ்" என்னுமோர் புழு தன் வயிற்றின் நுனியை அதிவேகமாய் எதிர்ப்பதுபோல் தன் சத்துருவின் எதிரில் காட்டுகின்றது. உண்மையில் இதற்குப் பலமும் கிடையாது, கொடுக்கும்கிடையாது. ஆனால் அவை இருப்பது போல் தைரியமாய்க் காட்டிக் கொள்கிறது. இதேமாதிரியாகவே ஒருவித வண்டு தன் தேகத்தினின்று நீட்டிக்கொண்டிருக்கும் மயிர்களால் பயமுறுத்துகிறது. ஆனால் வாஸ்தவத்தில்

அவைகளால் ஒன்றும் செய்யமுடியா. இன்னும் சில சிறிய ஈக்கள் செல்வது மிக விசித்திரமாக விருக்கிறது. அவைகள் பக்ஷிகளால் கொத்தப்பட்டுவாயில் அகப்பட்டுக்கொண்டால், தங்கள் தேகத்தை அதிவேகமாக ஆட்டுகின்றன. இந்த ஆட்டத்தைக்கண்டு பயந்து பக்ஷிகள் தங்கள் மூக்குகளைத்திறந்து விடுகின்றன. அவைகள் தப்பி ஒடிவிடும்.

சில மாம்ஸ பக்ஷிணிகளாகிய புழுக்கள் பகைவனிடம் அகப்பட்டுக்கொண்டால் தம்வயிற்றிலிருக்கும் வற்றைவாயிலெடுத்து பகைவனை அசங்கியப்படுத்துவதால் தப்பிப் பிழைக்கின்றன. சில பூச்சிகள் (பட்டுப்பூச்சி முதலியன) பிடித்துக் கொள்ளப்பட்டால், பலபல்டிகள் போடுவதாலும், இரத்தத்தை தேகத்தின்வழியாய் வேண்டுமென்று வெளிவிடுவதாலும், தம்பகைவர்களுக்குப் பயத்தையும் ஆச்சரியத்தையும்உண்டாக்குகின்றன.

மற்றொரு ஆச்சரியமான காப்பு ஆயுதம் யாதெனில்; சில மீன்கள் தம் தேகத்தினின்றும் மின்சாரத்தை உண்டாக்கி விடுவதால் பல பெரிய மிருகங்களைக் கூடக் கொன்றுவிடச் சக்தி பெற்றிருக்கின்றன. மச்ச வர்க்கத்தில் மூன்று மீன்கள் இந்த சக்தியை அதிகமாகப் படைத்திருக்கின்றன. அவை:—'சைலியிகஸ்'', 'கிம்னேடஸ்'', டார்பிடோ', மீன்.

முதல் வகுப்பு மீன்கள், ஆபிரிகாவிலிருக்கும் "நைல்" நதியிலும், ஸெனிகால் பிரதேசத்து நதிகளிலும், வசிக்கின்றன. அவ்விடத்து ஜனங்களுக்கு அவற்றைக்கண்டால் மிகவும் பீதி. "இடிமீன்" என்று அதற்குப் பெயர். கிம்னேடஸ் என்னும் மீன்கூட ஒரு சுத்தஜலவாசி. அது தென் அமெரிக்கா நதிகளிலும் பக்கங்களிலும் வசிக்கும் ஒருவிதமான ஈல்மீன் ஜாதியைச் சேர்ந்தது. அது 25 அடி நீளமிருக்கும்; பெரும் மின்சாரச் சூட்டைக் கொடுக்கக்கூடியது. அந்த மீன்களைப் பிடிப்பதற்கு அத்தேசத்து வாஸிகள் அவைகளிருக்கும் மைதானங்களில் குதிரைகளையும் மாடுகளையும் ஓட்டிவிடுவார்கள். இவைகள் ஒடிவரும் ஓசையைக்கேட்டு மீன்கள் தங்கள் மின் சாரத்தை வெளிவிடுகின்றன. இவ்வித ஆயுதத்தின் சூட்டைப்பொறுக்கமுடியாமல் அம்மிருகங்கள் அங்குமிங்கும் ஓடுகின்றன. இம்மாதிரியாகக் கொஞ்சநாழி சண்டைநடந்தபிறகு, மீன்கள் தம்மிடமிருக்கும் மின்சார சக்தியைச் செலவு செய்து விடுகின்றன. பிறகு அவைகளைக் கஷ்டமின்றி கத்திகளாலும் துப்பாக்கிகளாலும் கொன்று பிடித்துவிடுகிறார்கள். அம்மீன்களின் மின்சாரயந்திரம் (பாட்டரி) முதுகிலும் வாலிலுமிருக்கிறது. டார்பிடோ மீனின் யந்திரம் இரண்டு தசைப்பாகங்களில் முதுகின் இரண்டு பக்கங்களிலுமிருக்கின்றது. இத்தசையைதோல் மூடிக்கொண்டிருக்கிறது. இதை ஆராய்ந்து பார்த்தால் ஒரு "வால்டெய்க் பாட்டரி" போல் காணப்படுகிறது.

இவைகளினின்றுண்டாகும் மின்சார வலிமையை அளக்க ஒருவர் பிரயத்தனம் செய்ததில் 10 காண்டில் பவர் மின்சார விளக்கின் கம்பிகளை இம்மீனின் முதுகின் இரண்டு பக்கங்களிலும் மாட்டிவிட்டு அந்த மீனைக் கோபப்படுத்த, உடனே அம்மீன் மின்சாரத்தை வெளிவிட்டதென்றும், அந்த விளக்கு 10 செகண்டு எரிந்ததென்றும், ஒரு பெரிய மீன் இந்த விளக்கின் கரித்திரியை எரித்துவிட்டதென்றும் சொல்லுகிறார். இப்படிப்பட்ட மீன், மின்சாரத்தினால் மனிதனையும் மற்ற மிருகங்களையும் கொன்று தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளக் கூடுமென்று சொல்லவேண்டுவதில்லை.

"எதிர்க்காமல் எதிர்க்கும்" காப்பு விதங்கள் எதிர்த்துத் தோற்கடிக்கும் விதங்களைவிட அதிகமாகவும் மிக விநோதமாகவும் காணப்படுகின்றன. இவ்வகுப்பில் மிகச்சுலபமானதும், ஸகஜமானதுமான ஜந்துவின் எளியபாகங்களும், ஜெயிக்கக்கூடிய பாகங்களும் ஒரு விதமான மூடியால் மூடப்பட்டிருக்கின்றன. இந்த மூடி தன் பலத்தினாலோ, வெளித்தோற்றத்தினாலோ, அல்லது முட்களாலோ, அந்த ஜந்துவைப் பகைவர்களினின்றும் காப்பாற்றுகிறது. நத்தை தன் தேகம் முழுவதையும் தன் ஓட்டிற்குள் இழுத்துக் கொள்கிறது. முள்ளம்பன்றிக்கு ஏதாவது அச்சமுண்டாயின் அது உடனே தன்னைத் தானே சுருக்கிக்கொண்டும் தன்மேலிருக்கும் முட்களை வெளி நீட்டிக்கொண்டும் தைரியத்துடன் இருக்கும். நண்டைப்போன்ற சில ஜந்துக்களின் தேகம் முழுமையும் ஒரு விதமான எலும்பால் மூடப்பட்டிருக்கிறது, இந்த எலும்பை மடக்கும் சக்தியும் அவைகொண்டிருக்கின்றன.

இவ்வகுப்பைச் சேர்ந்த ஜந்துக்களில் மற்றொரு விசித்திரமுண்டு. இவைகள் தங்கள் பலமான அவயவங்களால் சண்டை செய்வதுண்டு. சண்டையில் நீட்டிக்கொண்டிருக்கும் கையாவது காலாவது அகப்பட்டுக்கொண்டு தோல்வி அடையும் போலிருந்தால், அந்த அவயவத்தைத்தானே தறித்துக்கொண்டு, அதாவது அதை விட்டுவிட்டு நொண்டியாக ஓடிவிடும். ஒடிந்துபோன கையானது திரும்பவும் வளர்ந்து விடும். இம்மாதிரி செய்வதில் அவைகளுக்கும் பல ஆபத்துகளினின்றும் தப்பி ஓட்டம் பிடிக்கச் சாத்தியமாகிறது. இது பொறுக்க முடியாத வலியுடன் ஒடித் தப்புவதோடுங்கூட, இரத்தப் பெருக்கு அதிகமா யுண்டாகாதபடியும் செய்து கொள்கிறது. மற்ற எவ்விடத்திலும் இரத்த ஒழுக்கு அதிகமாக விருந்தபோதிலும், கையும் தேகமும் சேருமிடத்தில் மாத்திரம் ஒருவிதமான தோல் மூடியுள்ளதால் இரத்தம் வெளிவருவதில்லை. இதே விதமாகத்தான் பல்லி தன் வாலைத் தானே தறித்துக் கொண்டு ஓடச் சக்திபெற்றுள்ளது.

நத்தையைப்போன்ற சிப்பி (கிளிஞ்சல்) களிலும் சங்குகளிலும் உள்ள ஜந்துக்கள் பல, தரையிலும் குளங்களிலும் சமுத்திரத்திலு மிருக்கின்றன. இந்தஜந்துவை மூடிக்கொண்டிருக்கும் சங்கு அல்லது ஓடு அந்த ஜந்துவாலேயே செய்யப்பட்டது. பலவித ஓடுகளின் வாயானது பல நீண்டபற்களைப் போன்ற முட்களால் மூடப்பட்டிருப்பதால், அதற்குள்ளே புகுந்து அதிலிருக்கும் நத்தையைத் தின்னும் பூச்சிகளுக்கு ஒரு பெரும் தடங்கலாய் அப்பற்கள் ஏற்படுகின்றன. சில ஸமயத்தில் ஓட்டின் வெளிப்புறம் அநேக முட்களால் மூடப்பட்டுள்ளதைக் காணலாம். இவ்வித சங்குகள் கடற்கரையில் மிக விசேஷம். அதிலுள்ள ஜந்துவை அதன் கூட்டையுஞ் சேர்த்து ஒரே தடவையாக விழுங்க எண்ணும் துஷ்ட மீன்களைப் பயமுறுத்துவதற்காகத்தான் இம்முட்களைத் தன் கூட்டின் மேல் மிகச் சிரயப்பட்டு அந்த ஜந்து கட்டியிருக்கிறது. அந்த துஷ்ட மீன் இவ்வித சங்கை விழுங்கிவிட்டால் அதன் கதி என்ன ஆகுமென்பதை நாம் சொல்ல வேண்டுவதில்லை. ஆனால் நத்தைஜாதியைச் சேர்ந்த எல்லாவித ஜந்துக்களுக்கும் இவ்விதக்கூடு கட்டிக் கொள்ளும் சக்தியைக் கடவுள் கொடுக்கவில்லை அவைகளின் மேல் ஒரு மெலிந்த ஓடுதான் இருக்கும். ஆனால் இவை வேறுவித ஆயுதங்களைப் பெற்றிருக்கின்றன. முன்னால் சொன்னபடி பல விஷத்திராவகங்களை வெளிவிடும் சக்தி இவைகளுக்குண்டு. "ஆக்டோபஸ்" மீன்களைப் போன்ற கடல் வழிப் பறிகள் அநேக ஆயுதங்களைப் படைத்திருக்கின்றன—ஒருபெரும் மூக்கு, அசைக்கமுடியாத பலம், வலுதத்தசை, வேண்டுமென்றால் தேகத்தில் வர்ணத்தை மாற்றும் சக்தி, இவைகளைப் படைத்திருக்கின்றன. இதுவுமன்றி, இவைகளின் எதிரிகள் அதிக கிட்டநெருங்கி, மிகவும் தொந்தரை செய்தால் இவைஒரு இங்கிபோன்ற திராவகத்தை வெளிவிடுகின்றன. இந்த திராவகம் சுற்றியிருக்கும் ஜலத்தைக் கறுப்பாக்கி, எதிரிகளுக்குக் கண் தெரியாமல் செய்துவிடுகின்றது. இச்சமயத்தில் இவைகள் தப்பிப் பிழைக்கின்றன. இவ்விதமாகப் பல விதங்களில் ஜந்துக்கள் தங்கள் பிராணனைக் காப்பாற்றிக் கொள்கின்றன.—சுதேசமித்திரனில், பாலம்.

---

## SCHOOL GARDENS IN CEYLON.

## இலங்கையிலுள்ள பாடசாலைத் தோட்டங்கள்.

பாடசாலைத்தோட்ட முயற்சி 1901 ம் ஆண்டிலேயே துவக்கம்பெற்றது. இதற்குச் சில வருஷங்களுக்குமுன்னே ஒரு பொதுவான பாடசாலையிலே கிருஷிக்கல்வி கற்பிக்க ஆரம்பமான முயற்சி பலிதப்படவில்லை. அதற்கு நியாயம் ஏற்ற மாணவர் போதாததே. ஆகையால் அப்பாடசாலையை நிறுத்திகிராமப் பாடசாலைதோறுஞ் சென்று கமக்காரரின் (வேளாளன்) பிள்ளைகளுக்குக் கிருஷிக்கல்வி கற்பிக்க ஒழுங்கு செய்யப்பட்டது. அதின் ஆரம்பகாலத்திற் சிலஎதிரிடைகளுண்டாயின. பிள்ளைகளைக்கொண்டு கூலிவேலை செய்விக்கக்கூடாதென்ற பெற்றாரின் தப்பெண்ணமும் இக்கல்வியினவசியத்தைக் கிரகிக்கக்கூடாத உபாத்திமாரின் தடையும் பிரதானமானவைகள். இத்தடைகள் சீக்கிரத்தில் மேற்கொள்ளப்பட்டன. 1901-ம் ஆண்டிலே ஐந்துபாடசாலைத் தோட்டங்களிருந்தன. இப்பொழுதோ அப்படிப்

பட்ட 240 தொட்டங்க ளிருக்கின்றன. தொகை யளவிற் றைரியங்கொடுத்தாலும் காரியத்தளவில் இவைகள் உண்டாக்கப்பட்ட நோக்கத்தை நிறை வேற்றுகின்றனவோ வென்பதுகேள்வி. அப்பள்ளிக் கூடங்களின் வித்தியாசமான நோக்கங்களையும், அந்நோக்கங்களெப்படி நிறைவேறி வருகின்றன வென்பதையும் பின்வருமாறு சொல்லலாம்.

(1) பள்ளிக்கூடங்கள் பிள்ளைகளால் விரும்பப் படத்தக்கவோர் இடமாக்கப்பட வேண்டுமென்பது முதலாம் நோக்கம். இத்தோட்டங்களுக்காகத் தெரிந்து கொள்ளப்பட்ட பள்ளிக்கூடங்களின் சுற் றுடலில் உண்டான மாறுதலதிசயமானது. இதற்கு முன்னே யனுப்பப்பட்டவோர் அரசாட்சிச் சுற்று நிருபத்தின்படி (கட்டளை) நாட்டப்பட்ட சில குறூற் றன்செடிகள் நின்ற விடங்கள் தற்போது காட்சிப் பிரியமுள்ள எவர்கள் கண்களையும் மருட்டத்தக்க (மயக்கத்தக்க) அழகான இடங்களாய் வந்து விட்டன.

(2) படிப்புக்குரிய காரியங்களிலே மனதைச் செலுத்திக் கொண்டிருக்கும் பிள்ளைகளுடைய மனங்களுக்கு வித்தியாஸமான வேலையினல் மன ஆறுதலுண்டாக்குதலிரண்டாம் நோக்கம். வேலை செய்தால் துன்பம் சுகவீனம் என்று நினைத்த இடங் களிலே அத்தப்பெண்ணமாற, பிள்ளைகளின் மன ஆறுதலுக்குத தோட்டங்களெவ்வள வுதவியா யிருக் கின்றன என்பதைப் பிள்ளைகள் தோட்டத்திலே நின்று குதுகலிப்போடும் முயற்சியோடும் வேலை செய்கிறதைக்கண்ட எவர்களும் இம்முயற்சியை மெய்ச்சிக்கொள்வார்.

(3) ஒழுங்கு, மாதிரி, புனிதவென்னும் (சுத்தம்) காரியங்களைத் தோட்டச் செய்கையில் பிள்ளை களுக்கு உதாரணமாய்க் கற்பித்தலே மூன்றும் இலக்காம் (எண்ணமாம்). மேற்சொல்லிய நற்பழக் கங்களை மாணவர் மனதிலேயுண்டாக்கச் சரியான ஏதுகாரணமிதுபோலில்லை யென்லாம்.

(4) இயற்கைப் படிப்புக்கு அதாவது ஸ்தாவரவர்க் கங்களையும் மிருகஜீவன்களையு மதனதனிடத்தில் வைத்துப் படித்தலுக்கு விசேஷித்த இடமிதுவே. இதைப்பற்றியோர் ஐயமுமில்லை. சிலபள்ளிக்கூடங் களிலே உபாத்திமார் சிறுத்தரூபத்திலே பொருட் காட்சிச்சாலைகளை ஸ்தாபித்து வருகிறார்கள். ஸ்தா வரவர்க்க, மிருகவர்க்கத்துக் குரிய இயற்கைப் பொருட்கள் அப்பள்ளிக்கூடப் பிள்ளைகளாலேயே சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வர்க்கங்களை விளங்கப்படுத் துஞ்சிறு புஸ்தகங்களை அடித்துப்பரப்ப அரசாட்சி யாரெத்தனப்படுகின்றனர்.

(5) பிரயோசனமும் அழகுமுள்ள செடிகளை யுண்டுபண்ணல். இதற்கும் பாடசாலைத்தோட்டங் கள் தகுந்த ஏதுவே.

(6) கிருஷிக்குரிய ஆதார அறிவைக் கற்பிப்பதே ஆறுவது நோக்கம். தோட்டத்திலே நடக்கிற காரி யத்தினின்று மாணுக்கர் இயற்கையாய்க் கிருஷி சாஸ்திரத்தின் ஆதாரப் பிரமாணங்களைக் கற்றுக் கொள்வார்.

(7) விதம் வீதமான செய்கைபண்ணக் கூடிய பயிர்வகைகளை மற்ற ஜனங்கள் காணும்படி செய்தல், திறமான பயிர்களும், வித்தியாஸமும் புதிதுமான பழங்களைக் கொடுக்கும் மரங்களும் இப்பாடசாலைத் தோட்டங்கள் மூலமாய்க் கமக் காரரின் கவனிப்புக்கு ஏதுவாக்கப்படுகின்றன. இச் செல்வாக்கின் மூலமாய்ப் புதியமரங்கள் அங்கங்கு நாட்டப்பட்டிருக்கிறதைக்காணலாம்.

(8) நானாவித வித்துக்களும், பூண்டுகளும் பல விடங்களிலும் பரப்புகிறதற்கும், அவைகளைச் செய்கைப் பண்ணுவதற்குரிய உசித வழிகளைச் சொல்லுவதற்கும் ஏற்ற இடங்களிப் பாடசாலைக ளேயாம். பிள்ளைகளே இவைகளைப் பரப்புகிறதற் குரிய வழிவகை. கிராமங்களிலிருந்து அநேகர் வந்து விதைகளை வாங்கிச் செல்லுகின்றனர்.

(9) கிருஷித்திருத்தக் கூட்டத்தாருக்கும், பயிரிடு வோருக்கு மிடையே போக்குவரத் துண்டாவதற்கு இதுவோர் வழிவகை. கிருஷிமுயற்சிக்குறிய புதின ங்கள் (அதிசயங்கள்) பொதுவான கமக்காரருக்குத் தெரியவருவது மிகவரிது. ஏனெனில், உட்கிராமங் களில் அநேக கமக்காரரிருக்கின்ற நியாயத்தினு லேயே. விவேகியானவோருபாத்தி இவ்விருபகுதி யாருக்கு மிடையிற் சம்பந்தத்தையுண்டாக்கக்கூடும். இந்த விஷயத்தில் இலங்கைக் கிருஷிச் சங்கம் விசேஷமுயற்சி செய்திருக்கின்றது. அச்சங்கம் பல வித வித்துக்களையும் உபகாரங்களையுங் கொடுத்து, சுய பாஷையிலேயே அவைகள் பயிரிடப்படும் வழி

வக்கைகளையும் பற்றித் துண்டுப் புத்தகங்களெழுதியிருக்கின்றது.

(10) பயிரிடுதலினுசித முறையைக் கமக்காரருக்குக் கற்பிப்பது இன்னொரு நோக்கம். இதின் பெறுபேறு (இலாபம்) காலஞ்செல்லவேயுண்டாகும்.

(11) கிராமங்களில்வசிக்கும் வாலிபருக்குக் கிருஷிமுயற்சியிற் சார்புண்டாக்கல், பயிர் பூண்டுகளை வளர்க்கிறதிலேயோர் புதிய ஆசையை வருவித்தல், இயற்கையைக் கவனிக்கச் செய்தல், நாட்டுச்சீவியத்தில் விருப்பமுண்டாக்கல்.

(12) மாணவர் தங்கள் தங்கள் வீடுகளிலே தோட்டங்களை யுண்டாக்க அவர்களைத் தைரியப்படுத்தல். பாடசாலைத் தோட்டங்களின் மூல்மாய் அநேக தோட்டங்கள் வீடுகளிலேயுண்டாக்கப்பட்டிருக்கின்றன.

(13) கடைகியாகத்தொழில்முயற்சியின் மகத்துவத்தை மாணுக்கருணரச்செய்து மாணவர் தங்களுக்குள்ளேயும் பள்ளிக்கூடங்களுக் குள்ளேயும் அததுமற்றதிலும் முன்னேறி வரவேண்டுமென்றமேலான எதிரித்தனத்தை யுண்டாக்குதலும் இப்பாடசாலைத் தோட்டங்களினிலக்காம். ஓர் பள்ளிக்கூடத்தின் மாணவரே ஒருவரிலும் மற்றவர் விசேஷித்தவேலை செய்யவேண்டுமென நினைத்து முயற்சிசெய்யக் கலாசாலை விசேஷ நிலக்குவரும். பரிசுகள் கொடுத்தலினுலிது இன்னுந் தைரியப்படுகின்றது.

இப்பாடசாலையிற் பயிற்றப்படவேண்டியவர்கள் விரிவாகக்கூடிய மனங்களையுடைய வாலிபரானதினுலும் தினமும் ஒழுங்கு முதலியவை பயிற்றப்படவேண்டிய கிராமப்பாடசாலைகளிலே இத்தோட்டங்களிருப்பதினுலும் பாடசாலைத் தோட்டங்கள் அனுகூலப்பட்டுவருகின்றன. மேலும், கலாசங்கத்தாரும், இராசாங்க தாவரசங்கத்தாரும் ஒத்து வேலை செய்வதும் அனுகூலத்துக்கு இன்னொரு நியாயம். முதல் ஐந்து வருஷங்களிலும் கலாசங்கத்தாரும் 1906-ம் ஆண்டு துவங்கித் தாபரசங்கத்தாரும் நடத்திவருகின்றனர். இவைகளை மேற்பார்வை செய்கிறவர்களாயும், சோதிக்கிறவர்களாயும் எழுவர் நியமிக்கப்பட்டிருக்கின்றர். இவர்களுடைய முக்கிய ஸ்தானம் கொழும்பிலுள்ள அரசாட்சியாருடைய தாவரசாலையே. இது 3 ஏக்கர் விசாலமுள்ளது. இங்கே பூச்செடிகள், பழமரங்களெல்லாம் மேடைகளிற் போட்டுப் பலவிடங்களுக்குமனுப்பப்படுகின்றன. ஒவ்வொருவருஷமும் 5,000 மரங்கள் செடிகள் இலங்கையின் பலவிடங்களுக்குமனுப்பப்படுகின்றன.—கமத்தொழில் விளக்கம்.

## THE LATE Mr PANDITHORAI THEVAR.

## காலஞ்சென்ற ஸ்ரீமான் பாண்டித் துரைசாமித் தேவரவர்கள்.

தேச பாஷைகளைப் படிப்பாரும் ஆதரிப்பாரும் குறைந்துகொண்டு வரும் இக்காலத்தில், மதுரையில் தமிழ்ச் சங்கம் ஒன்றை ஸ்தாபித்துத் தமிழகத்துக்குப் பேருதவி புரிந்துவந்த பாலவநத்தம் ஜமீன்தாராகிய ஸ்ரீமான் பொ. பாண்டித் துரைசாமித் தேவரவர்கள் (டிஸம்பர்) மாதம் 2-ம் தேதி பகல் $11\frac{1}{4}$ மணிக்கு இராமநாதபுரத்தில் தமது வாசஸ்தானமாகிய சோமசுந்தர விலாஸத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தார்களென்னும் செய்தி பெருந்துயரத்தை விளைவித்து வருகின்றது. இவர்களைப் பற்றித் தெரிந்தவற்றைச் சுருக்கமாக எழுதுகிறோம்:—

காலஞ்சென்ற முத்துராமலிங்க ஸேதுபதியவர்களுடைய தமயனும், இராமநாதபுரம் ஜமீன் மானேஜராகஇருந்து அந்த இராஜ்யத்தை நன்னிலைமைக்குக் கொண்டுவந்த சிறந்தபுத்திமானும், தமிழிலும், ஸமஸ்கிருதத்திலும் ஸங்கீதத்திலும் வல்ல பல வித்வான்களை ஆதரித்த அருங்கொடை வள்ளலும், யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் முதலிய வித்வான்களைக் கொண்டு திருக்குறள் பரிமேலழகருரை, திருச்சிற்றம்பல கோவையார் பேராசிரியருரை, ஸேதுபுராணம், தர்க்க ஸங்கிரகம், அன்னம் பட்டீயம், தனிப்பாட்டிரட்டு, பிரயோக விவேகம் முதலிய நூல்களை வெளிப்படுத்திப்பாஷையைப் பரிபாலித்து வந்த கீர்த்திமானும், பண்டிதர்கள் பேச்சைத் தாம்கேட்டு மகிழ்ந்தும் தம்முடைய இனிய பிரசங்கத்தாலும் வார்த்தைகளாலும் அவர்களை மகிழ்வித்தும், விளங்கியவருமாகிய ஸ்ரீமான் பொன்னுஸாமித் தேவரவர்களுடைய மூன்றுவது புத்திரர் இவர்.

பிதா அவர்கள் அடைந்த கீர்த்திக்குச் சிறிதும் குறைபடாமல் இவர்,

> "தக்கார் தகவில ரென்பதவரவ
> ரெச்சத்தாற் காணப்படும்."

"மகன்றந்தைக் காற்றுமுதவி யிவன்றந்தை
யென்னோற் றான்கொல்லென் னுஞ் சொல்"

என்னும் செய்யுட்களுக்கு ஓர் உதாரணமாக விளங்கினர்.

கல்விப் பொருளேயும், செல்வப்பொருளேயும் ஒருங்கே பெற்றிருந்தவர். தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலும் சைவஸித்தாந்த சாஸ்திரங்களிலும் நல்ல பாண்டித்திய முடையவர். செய்யுள் செய்யும் சக்தியும் நன்கு அமையப் பெற்றவர். திருவாடுதுறை யாதீனத்து மஹாவித்வான் திரிசிரபுரம் ஸ்ரீமீனாக்ஷி சுந்தரம்பிள்ளேயவர்கள் மாணாக்கர்களுள் ஒருவரிடத்திலும் அஷ்டாவதானம் ஸ்ரீ முத்துசாமி ஐயங்காரவர்களிடத்திலும் மதுரை ஸ்ரீ இராமசாமிப் பிள்ளேயவர்களிடத்திலும் திருவாடுதுறை ஸ்ரீ பழனிக் குமாரத் தம்பிரானவர்களிடத்திலும் சில சில தமிழ் நூல்களேயும் ஸித்தாந்த சாஸ்திரங்களேயும் இவர் முறையாகப் பாடங்கேட்டவரென்று தெரிகிறது. கம்பராமாயணத்தில் அருமையான பாடல்களுக்கு இவர் பொருள் சொல்வது மிகவும் அழகாகவும் உருக்கமாகவும் இருக்கும்.

சைவத்தில் விசேஷமான பற்றுள்ளவர். திருவாடுதுறை ஸ்ரீ சிவஞானஸ்வாமிகளிடத்திலும் அவர்களியற்றிய பிரபந்தங்களிலும் மிகுந்த அபிமானமுள்ளவர். அப்பிரபந்தங்களே, மேலே கூறிய மதுரை இராமசாமிப்பிள்ளே யவர்களேக் கொண்டு வெளிப்படுத்தியவர் இவரே. தமிழ் நூற் பயிற்சியையே பொழுது போக்காகக் கொண்டவர்.

ஜாலவித்தை, ஜோஸியம், ரேகா சாஸ்திரம், புகைப்படம் எடுத்தல் முதலிய கலேகளில் நல்ல பயிற்சியுள்ளவர். அதிபாலியத்திலேயே இத்தகைய சக்தி இவருக்கு அமைந்தது மிகவும் பாராட்டத் தக்கது.

இவரால் ஆதரிக்கப் பெற்ற தமிழ்ப் புலவர்களும், ஸமஸ்கிருத பண்டிதர்களும், ஸங்கீத வித்வான்களும் பலர். ஸங்கீத ரத்னங்களாகிய ஸ்ரீ மஹாவைத்தியநாதசிவனவர்கள், பட்டணம் சுப்பிரமணிய ஐயரவர்கள் முதலியவர்களிடம் இவருக்கு விசேஷமான ப்ரீதியுண்டு. உக்கிரபாண்டியரென்றும் இவர் வழங்கப்பெறுவர்.

நல்ல வித்வான்களேக் கண்டுவிட்டால் அவர்களோடு அளவளாவி ஆனந்தமடைவரேயன்றி வேறொன்றையும் கவனியார். ஏழைகளிடத்து மிக்க இரக்கமுள்ளவர். பிறர் துன்பப்படுவதைக் கண்டால் சிறிதும் மனம்பொறார். இவருடைய பொருளுதவியைப் பெற்றுக்கொண்டு, தமிழ், ஸமஸ்கிருதம், ஆங்கிலம், ஸங்கீதம் முதலிய கலேகளேக்கற்று நல்ல நிலேமையில் இப்போது பலர் உளர்.

செல்வத்தை ஒருபொருளாக மதியாமல் கல்வியையே பெரிதாகக்கருதியவர். யாரும் இவரிடத்தில் அதிக ஸுலபமாகப் போய்பேசிப் பழகலாம். இவருடையபொருளெல்லாம் பெரும்பாலும் வித்வான்களே ஆதரிப்பதிலும், அடியார்களுக்கு உதவி புரிவதிலும், ஏழைகளுக்கு அன்னவஸ்திரம் அளித்தலிலும், ஆலயங்களேப் பரிபாலனஞ் செய்வதிலுமே செலவிடப் பெற்றுவந்தன. வித்வான்களே யாதரித்து வந்த பழையகாலத்துப் பிரபுக்களிடமிருந்த குணவிசேஷங்கள் இவரிடம்விளங்கக் காணலாம். இந்தக்குணவிசேஷங்களால் இவர் ஜமீன்தார்களுள் ஒரு திலகம்போல விளங்கினர்.

சென்னே, சிதம்பரம், திருவாரூர், கும்பகோணம், தஞ்சை, திரிசிரபுரம், மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, பாளேயங் கோட்டை முதலிய நகரங்களில், இவர் அநேக விஷயங்களேப்பற்றி அடிக்கடி பிரஸங்கம் செய்ததுண்டு. மெல்லிய குரலோடு இனிமையாகப் பேசும் வழக்கத்தையும் பல்லாயிரக் கணக்கான ஜனங்களுடைய மத்தியில் இருந்துகொண்டு, அவர்களுடைய மனதை ஒருங்க தம்மிடத்தில் இழுக்கும் ஆற்றலேயும், முகமலர்ச்சியையும் இவர் பெற்றிருந்தாரென்பது அவர் பிரசங்கங்களேக் கேட்டோருக்கு நன்ருகத் தெரிந்திருக்கும்.

இவருடைய பாஷாபிமானமும், கல்வி வன்மையும், வெகு காலத்துக்கு முன்னே நல்லிசைப் புலவர்கள் பல்லோர் வீற்றிருந்து தமிழ் மொழியை ஆராய்ந்து வளர்த்தற் கிடமாக விளங்கிய மதுரை மாநகரின் கண் ஒரு தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்து, சென்ற பத்து வருஷங்களாகப் பரிபாலித்து, பல வித்வான்களேக்கொண்டு செந்தமிழ்என்னும் மாதாந்தப்பத்திரிகை வாயிலாகஅருமையான பல நூல்களேயும் விஷயங்களேயும் வெளிப்படுத்தியும், தமிழ்க்கலாசாலேயொன்றை ஸேதுபதிபெயரால் அமைத்துத் தக்க புலவர்களேக்கொண்டு, மாணாக்கர்களுக்குப்

பாடம் ஓதுவித்து அவர்களைப் பண்டிதர்களாக்கியும், யாவரும் எளிதில் வந்து படித்துப் போகும்படி பாண்டியன் புஸ்தகசாலையென்று ஒரு புஸ்தகசாலையை ஸ்தாபித்தும், வருஷந்தோறும் தக்க பாஷாநிபுணர்களைக்கொண்டு ப்ரஸங்கங்கள் புரிவித்தும், ஆங்கிலக் கலாசாலை மாணுக்கர்களுக்கும் தமிழை மட்டும் கற்பவர்களுக்கும் தனித் தனியே பரீக்ஷைகளேற்படுத்தி நன்ருகத் தேர்ச்சி அடைபவர்களுக்குத் தக்க பரிசளித்தும், சங்கம் விருத்தியாதலேயே கருதித் தமது பொருட்செலவையும் தேக சிரமத்தையும் சிறிதேனும் பாராது ஆங்காங்கு சென்று சங்கத்தின் அபிவிருத்திக்கு வேண்டிய வழிகளைத் தேடியும், பஞ்ச காவியங்களுள் ஒன்ருகிய மணிமேகலையையும், புறப்பொருள் இலக்கணமாகிய புறப்பொருள் வெண்பா மாலையையும், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தையும், இவை போன்ற வேறு சில நூல்களையும் வெளிவரும்படி செய்வித்தமையாலும், பற்பல நூல்களில் ஆங்காங்குள்ள ஸாரமான விஷயங்களை ஒருங்கே யாரும் எளிதில் உணர்தற் பொருட்டும் ஒவ்வொரு விஷயத்தைக் குறித்துச் சொல்லும் பல நூலாசிரியர்களுடைய கருத்தை ஒருசேர எல்லோரும் நன்ருக அறிதற் பொருட்டும் தொகுத்துப் பதிப்பித்து வெளியிட்ட பன்னூற்றிரட்டு, ஸைவமஞ்சரி முதலிய நூல்களாலும் நன்கு விளங்கும். பல வித்வான்களும் இவர் வெளியிட்ட நூல்களுக்கு அளித்திருக்கும் சிறப்புப் பாயிரங்களால் அவர்களுக்கு இவரிடம் உள்ள நன்மதிப்பு வெளியாகின்றது.

ஆங்கிலத்திலும் இவருக்குப் பயிற்சியுண்டு. இராமநாத புரத்தில், பாண்டியன் ஸெகண்டரி ஸ்கூல் என்று ஒரு பாடசாலை இவரால் ஸ்தாபிக்கப் பெற்றுச் சில வருஷங்களாகச் செவ்வனே நடைபெற்று வருகின்றது. தமிழ்ச் சங்கத்தை இன்னும் மேலான நிலைமைக்குக் கொண்டுவந்து பழைய தமிழ் நூல்களை வெளியிட வேண்டுமென்ற அவா இவருக்கு மிகுதியாக இருந்தது. இன்னும் சில காலம் இருந்தால் எவ்வளவோ நன்மைகளைப் புரியக்கூடிய இவர், தமது பால்யமாகிய 45-வது வயதில் காலஞ்சென்றமை தமிழ் மக்களின் துர் அதிர்ஷ்டமே. அவருடைய அகால மரணத்தைக் கேட்டுத் துக்கியாத பிரபுக்களும், வித்வான்களும், மாணுக்கர்களும் இரா ரென்றே சொல்லலாம். படிக்காசுப் புலவர் ஒரு பிரபு இறந்த சமயத்தில் இயற்றிய "திரும்பிவந்து பிறந்தாலொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லேயே" என்னும் செய்யுள் இப்போது ஞாபகத்துக்கு வருகின்றது.—சுதேசமித்திரன்.

## SLEEP.

## நித்திரை.

நித்திரை என்பது ஒவ்வொரு பிராணியினுடைய உயிருக்கும் உறுதியை யளிக்கும் ஒரு பெரிய ஊட்டம். கால் கை முதலிய உறுப்புகளிலிருக்கும் கீல்களுக்குப் பலங்கொடுத்து, அவைகள் தத்தம் தொழிலைச் செய்ய வலிமை கொடுப்பது தூக்கம் என்பது தான். ஒரு வைத்தியர் நித்திரையின் அவசியத்தைப் பற்றிப் பின் வருமாறு சொல்லுகிருர். பகலில் நாம் காலைமுதல் மாலைவரையில் படும் அவஸ்தை நாழிகை ஏற ஏற அதிகரித்துக் கொண்டு வருகிறது. ஹிருதயமும் நாழிகையாக அதிகமாக அடிக்கிறது. இராத்திரி நாம் தூங்கப் போவதற்கு முன்னமே அது அடிப்பது வெகு அதிகம். தூக்கமட்டிமிருந்து கொண்டு அந்த வேகத்தைக் குறைத்துக் காலமே மறுபடி சரியான அளவுக்குக் கொண்டுவாராமல் போனல் மனிதனிந்த உலகத்திற் பிழைத்திருப்பதே வருத்தம். காலையில் அதுவும் நாம் தூங்கி எழுந்திருக்கும்போது ஹிருதயம் அடிப்பது வெகு நிதானம். இந்த காரணத்தைக்கொண்டுதான் நம் நாட்டில் வைத்தியர்களும் காலை வேளையில் தாது பார்க்கவேண்டுமென்று சொல்லுகிருர்கள். பகல் முழுவதும் ஒரு மனிதன் இந்த உலக விஷயத்தின் பொருட்டு உழைத்தே தீரவேண்டும். என்னென்னவோ பகல் முடியச் செய்கிருேம், ஓடுகிருேம், அலைகிருேம், அவஸ்தைப்படுகிருேம். ஜட்காக் குதிரைமாதிரி தேகத்தைச்சக்கை சாராகப் பிழிந்து விடுகிருேம். இவ்வளவும் நாம் சந்தோஷமாகச் செய்வது. பகல் 30 நாழிகையுமானவுடன் இரவு வந்துவிடும். அக்காலத்தில் நமது வருத்தங்களை மறந்து நாம் தூங்கவேண்டுமென்கிற எண்ணத்துடன் நித்திரை செய்வதற்கே ஈசுவரனிரவைக் கொடுத்திருக்கிருர். நமக்குப் பலத்தையும் சந்தோஷத்தையும் கொடுப்பது இரவே. மனதிலும் தேகத்திலும் நித்திரையானது, தனது அமிருதத்தை ராத்திரிகாலத்திற் கக்காமற்போனல் நமது வாழ்நாட்கள் வெகுவாயிருக்கா. விளக்கை அணைத்து அல்லது சிறியதாகவைத்து விட்டுத் தலையணையில் நாம் தலை வைத்துப் படுக்கும்போது நமக்கு இவ்வுலகிலுண்

டாகும் எல்லாத் துக்கங்களையும் கஷ்டங்களையும் மறந்துவிடுகிறோம். இந்த நித்திரைமட்டு மில்லா விடில் எவ்வளவு கஷ்டம். மனிதனுக்கு மாத்திர மன்று எல்லாப் பூதப் பிராணிகளுக்கும் பிராண னுடன் பிறந்திருக்கிற ஒவ்வொரு ஜந்துவுக்கும் இது ஆகாரம் சுவாசம் இவைகளைப்போல முக்கியமாக வேண்டிய விஷயம். மாலைப்பொழுதாகும்போது பக்ஷிகளெல்லாம் தத்தம் இனிமையான குரலாற் பாடிக்கொண்டு இராப்பொழுதைத் தூக்கத்திற் கழிக்க கூட்டில் வந்து அடைந்துவிடுகின்றன. ஏழையும் பணக்காரனும் ஏக ரூபமாகவே நித்திரை யை விரும்புகிறார்கள். தூக்கத்திற்கு சரியான காலம் இரவு என்பதேயாம். ஏனெனில் இர விற்கு இயற்கையாக ஏற்பட்டிருக்கும் நிஸ்சப்த மும் அமரிக்கையும் நாம் சௌக்கியமாக தூங்கு வதற்கு காரணங்கள் ஆகின்றன. பகல் வேலை செய்வதற்கும் இரவு தூங்குவதற்கும் என்று கடவு ளாற் குறிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கு விரோ தமாகச் சிலர், இராவெல்லாம் விழித்துப் பகலில் தூங்குவார்கள். பகலில் தூங்குவது சில சமயத்தில் தலைக்கனத்தையும் வாய்க்கசப்பையும் உண்டாக் கும். அன்றியும் தூக்கத்தால் ஒருவன் அடையவேண் டிய பொது நன்மையைப் பகலில் தூங்குகிறவன் அடையவேமாட்டான். இரவில் வேலைசெய்து பக லில் தூங்குகிறவனுக்குப் பகலுங் கெட்டு இரவுங் கெட்டு ஒருவித காரியமும் நிறைவேறாமற் போகும். ப்ரெட்ரிக் திக்ரேட் என்பவரும் நெப்போலி யன் என்பவரும் ஒரு நாளைக்கு 5மணிதான் தூங்கி யிருக்கிறார்கள். அலெக்ஸாண்டர் அர்பேலா என்ற போர்களத்திலும்; நெபோலியன் ஆஸ்டர் லிட்ஸ் என்னும் போர்களத்திலும் போர் நடந்து கொண்டி ருக்கும் இடத்திற்கு மத்தியிலேயே தங்களைச் சுற்றி நானாவித ஆயுதங்கள் வந்து விழுந்து தங்கள் பிரா ணனைப் பிரதி நிமிஷமும் அபாயத்தில் வைத்திருக் கும்போதே அயர்ந்து தூங்கினதாகச் சொல்லியி ருக்கிறது. இவர்கள் ஸாதாரணமானவர்கள் அல் லர். பெருத்த போர்வீரர்கள் தூங்காதே தூங்காதே, என்று ஒருவனை சவுக்கால் அடித்தபோதிலும் அவன் சுகதேகியானால் 10 நாழிகைக்கு மேல் தூங்கியே தீருவான்.

## VEGETARIANISM.

## சாகபக்ஷணம்.

மனிதர்கள் சாக பக்ஷணிகள், மாம்ச பக்ஷணிகள் என ஸாதாரணமாக இருவகையாகப் பிரிக்கப்பட்டு வருகிறார்கள். சாக பதார்த்தங்களாகிய காய் கிழங்கு, பருப்புக்கள், கம்பு, கேழ்வரகு, அரிசி, தான்யம், கீரை முதலியவைகளை உட்கொள்பவர் களைத்தான் சாக பக்ஷணிகளென்று சொல்லுவது. இவர்கள் பால், தயிர், மோர், நெய், வெண்ணெய் முதலான்வைகள் மாம்ச பக்ஷணங்களான போதி லும் அவைகளையும் சாப்பிட்டு வருவார்கள். மாம்ச பக்ஷணிகள் மேற்சொன்ன சாக பக்ஷணங்களோடு ஆடு, மாடு, பன்றி, கோழி முதலிய ஜீவ ஜெந்துக் களை வதைத்து அவைகளின் மாம்சங்களையும் சாப் பிட்டு வருவார்கள். உலகத்திலேயே மாம்சபக்ஷணி களின் தொகை குறைந்துவருகிறது. சாஸ்திரிகள் சாக பக்ஷணமே தேகத்துக்கும் மனதுக்கும் உத்தம மானதென்றும், மாம்ச பக்ஷணம், ஸாதாரணமாக எந்த தேசத்திலும், விசேஷமாக உஷ்ண தேசங் களில், கெடுதியை விளைவிக்கும் என்றும் சொல்லி வருகிறார்கள். இந்துக்களாயுள்ளவர்கள் பக்ஷி, மிரு கங்களை வதைத்துச் சாப்பிடுவது யுக்தமான காரிய மன்று. சாஸ்திரவிரோதமாயிருப்பது மல்லாமல் மாம்ஸ பக்ஷணத்தால், அதைய்நுசரித்து வருபவனி டம், கருணை, இரக்கம், பச்சாத்தாபம், முதலிய உத் தமகுணங்கள் நசித்தும்போகின்றன, அமெரிக்கா, ஐரோப்பா என்னும் கண்டங்களிலுள்ள வெள்ளைக் காரர்களே மாம்சம் சாப்பிடுவதை நிறுத்திவருகிறார் களென்றால், "அஹிம்சா பரமோதர்ம" என்கிற கொல்லா விரதத்தை ஸம்பிரதாயமாக அநுஷ்டித்து வந்த இந்துக்கள் அந்த விரதத்தை இப்போது மறந்து தங்களுடைய இரப்பையை மிருகங்களைக் கொன்று புதைக்கும் குழியாக்கி வருவது மாக அருவருப்பான அகிர்த்தியம். வெள்ளைக்காரர்களு டைய ஊர்களிற் சிலவற்றில் மிருகங்களைச் சாப்பிடு வதற்காகக் கொலைசெய்யும் "கசாப்" காரர்களை நீதிஸ்தலங்களில் நியாய விசாரணை செய்யும் ஜூரி களிற் சேர்ப்பதில்லை. ஏனெனில், இவர்கள் மிருகங் களைக் கொல்லுவதிலேயே தங்கள் வாழ்நாளைக் கழிக்கிறார்களாகையால் மனித ஜீவனையும் லவலேச மாக நினைத்துவிடுவார்களென்ற பயத்தால்தான்.—

சுதேசபரிபாலினி.

## DEPARTMENTAL NOTES.
## பகுதிக் குறிப்புகள்.

### AGRICULTURE.
### விவஸாயம்.

SHEEP BREEDING FOR WOOL.

மயிருக்காக ஆடுவளர்த்தல்.—வடக்கே கூலு ஜில்லாவிலுள்ள ஆடுகளின் மயிரை இன்னும் திரப் படுத்துவதற்காக ஸமீபத்தில் சில பரீக்ஷைகள் செய் யப்பட்டன. மெரினோ என்னும் ஒருவகையான ஆட்டுக் கடாக்களை அங்கங்குள்ள ஆடுகளோடு பொலிபச் செய்தார்கள். இப்படிப் பொலிவதற்காக 25 கடாக்கள் கொண்டுவரப்பட்டதில் 10 தான் தேறின. ஆனால் இவைகளுக்குப் பிறந்த ஸுமார் 100குட்டிகளில் செத்துப்போனவைகள் ஸ்வல் பமே. இந்தக்குட்டிகளெல்லாம் நன்றாயிருக்கின்றன வாம். அவைகளிலிருந்து நல்லமயிர் சிரைக்கலா மென்று தோன்றுகிறதாம். இதற்கு முன்னால் ஹிஸ் ஸார், ஹஸாரா, என்னும் ஜில்லாக்களில் மெரினோ கடாக்கள் கொண்டுவரப்பட்டு அவைகள் நன்றாயி ருக்கின்றனவாம். ஆகையால் கூலு ஜில்லாவுக்கு வேண்டிய மெரினோக்கடாக்களை மேற்சொன்ன இரண்டு ஜில்லாக்களிலிருந்து தருவித்துக்கொள்ளக் கூடாதாவென்று பஞ்சாப் கவர்ன்மெண்டார் அவர் களுடைய விவஸாய டைரெக்டரைக் கேட்டுவிட்டி ருக்கிறார்கள்.

INDIAN GROWN COTTON.

இந்தியாவில் பயிரான பருத்தி.—இங்கிலாந்தி லுள்ள மான்செஸ்டர் என்னும் பட்டணத்தில் பருத்தி விளைவை விருத்தி செய்வதற்காக ஒரு ஐரோப்பிய சங்கம் இருக்கிறது. அந்த சங்கத்தின் மீட்டிங்கு ஒன்றில் ஸமீபத்தில் திருநெல்வேலியில் பயிரான கம்போடியாப் பருத்தி, மாதிரி கொஞ்சம் காண்பிக்கப்பட்டது. இந்தப் பருத்தியில் 3000 மூட்டைகள் ஒல்ட்ஹாம் என்னும் பட்டணத்தில் உபயோகப்படுத்தப்பட்டனவாம். அந்தப் பருத்தி ரொம்பவும் நன்றாயிருந்ததாக புகழ்ந்து, மேற் சொன்ன சங்கத்தார் இந்தியா கவர்ன்மெண்டா ருக்கு ஒரு கடிதம் எழுதுவதாக தீர்மானித்தார்கள். அதோடுகூட, அப்படிப்பட்ட பருத்தியை இன்னும் அதிகமாக விளைவிக்க ஏற்பாடு செய்ய வேணு மென்று இந்தியா கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொண்டார்கள். தவிர, இந்தியாவில் விவஸாய விரு த்திக்காக கவர்ன்மெண்டார் செலவழிக்கும் பணம் போதாதென்றும், பருத்தி விளைவை அதிகப்படுத்து வதற்காக ஜாஸ்தி பணம் செலவழிக்கவேண்டுமென் றும், இந்தியா மந்திரியாகிய லார்ட் க்ருவைக்கேட் டுக்கொள்வதாகவும் தீர்மானித்தார்கள். இந்த ஸங் கதி இந்தியாவில் பருத்தி பயிர் செய்யும் ஒவ்வொரு வருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கும்

PADDY FOR RICE MILLS.

அரிசி ஆலைகளுக்கு வேண்டிய நெல்.—நெல்லை கைக்குத்தலுக்கு விற்காமல் அரிசி ஆலைகளுக்கு அனுப்புகிறவர்கள் ஒரு விஷயத்தை நன்றாய் ஞாப கம்வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, அவை களுக்கு அனுப்பும் நெல் நன்றாயும், பருமனாயும், ஒரே சீராயும், இருக்கவேண்டும்; சின்னதும் பெரி துமாய்க் கலந்திருக்கும் நெல்லைப் பிரித்தெடுப்பதற் காக இன்னும் ஸுலபமான யந்திரம் ஒன்றும் ஏற் படவில்லை. ஆகையால், பலசீரான நெல்லை யந்தி ரத்தில் கொடுக்கும்பொழுது, பெரிய மணிகள் நொருங்கியும், சிறு மணிகள் குத்தப்படாமலும், விழுந்துவிடுகின்றன. இதனால் என்ன ஆகிறதென் றால், அரிசியோடு நெல் கலந்து அரிசி பார்வை கொடுக்காமலும் விலை குறைந்தும்போகிறது. நெற் களைப் பொறுக்கிவிடலாமோ வென்றால், கூலி ஜாஸ்தியாகிவிடுகிறது. அரிசியில் நொய் எவ்வளவுக் கெவ்வளவு ஜாஸ்தியாயிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு விலை குறைந்துபோகிறது. ஆகையால் அரிசி ஆலை வைத்திருக்கிறவர்களுக்கு ஒரே சீரான நெல்லை ஸப்ளை செய்யக்கூடுமானால் அவர்கள் நல்ல விலை கொடுப்பார்கள் என்பதில் ஸந்தேகமில்லை. இதை நம்முடைய விவஸாயிகள் மறக்கமாட்டார்க ளென்று நம்புகிறோம்.

ELECTRICITY AND SHEEP RAISING.

மின்சாரமும் ஆடுவளர்த்தலும்.—அமெரிக்காவில் கலிபோர்னியா என்னும் மாகாணத்தில் லாஸா

க்லாஸ் என்னும் இடத்தில் ப்ரொபெஸர் ஸைலஸ் வென்ட் வொர்த் என்பவர் ப்ராணிவர்க்கங்களையும் பயிர் வர்க்கங்களையும் போன வருஷத்தில் மின்சார சக்திக்கு உட்படுத்தி சில பரிசோதனைகள் செய்து பார்த்தார். இரண்டாயிரம் ஆடுகளை, ஆயிரமாயிரமாகப்பிரித்து ஒரு ஆயிரம் ஆடுகளை மின்சாரம் ஓடும் கம்பிகளுக்குக் கீழே உள்ள ஒரு வயலில் அடைத்து இன்னொரு ஆயிரம் ஆடுகளை மின்சாரம் அண்டாத வேறொரு வயலில் அடைத்தார். இப்படிச் செய்து பார்த்ததில் மின்சாரம் ஓடின கம்பிகளின் கீழுள்ள ஒவ்வொரு ஆடும் ஸராஸரியில் இரண்டுக்குக் கொஞ்சம் அதிகமாக குட்டிகள் போட்டது. மின்சாரம் அண்டாத இடத்திலிருந்த ஆடுகள் ஸராஸரியில் ஒரு குட்டிக்குக் குறைச்சலாகவே போட்டன. ஆடுகளிலிருந்து கிடைத்த மயிர்களிலும் வித்தியாஸங்கள் இருந்தன. மின்ஸார சக்திக்குட்பட்ட ஆடுகளின் மயிர் அப்படிக்கு உட்படாத ஆடுகளின் மயிரை விட ஐந்தில் ஒரு பாகம் அதிக கனமாயிருந்ததாம். மேலே சொல்லிய இரண்டு வயல்களையும் உழுது கோதுமை விதைக்கப்போகிறார். அந்தப் பயிருக்கும் மின்சாரத்திற்கும் ஏப்படியிருக்குமென்று பார்க்கப்போகிறார்.

SUGAR-CANE.

**கரும்பு.**—ஒரு ஏகராவில் உற்பத்தியாகும் கரும்பிலிருந்து எடுக்கக் கூடிய சர்க்கரை நான்கு விஷயங்களைப் பொருத்திருக்கிறது.

1. கரும்பின் எடை.
2. கரும்பிலுள்ள ரஸத்தின் அளவு.
3. ரஸத்திலுள்ள சர்க்கரையின் அளவு.
4. ரஸம் அழுக்கில்லாமல் சுத்தமாயிருத்தல்.

கால நிலைமை, சீதோஷ்ணம், மண்வாகு, அவைகளால் கரும்பின் மேன்மை வேறு பட்டாலும், மேற்சொன்ன நாலு விஷயங்களை கீழ்கண்டவைகளால் ஒருவாறு விருத்தியாக்கக் கூடும்.

1. கரும்பின் ஜாதி.
2. செய்நேர்த்தியின் மாதிரி.
3. எருவின் குணம்.
4. அறுக்கும் ஸமயம், அதாவது சில ஸமயத்தில் ரஸத்தில் அதிக இனிப்பும் அழுக்கும் குறைவுள்ள தருணம்.

TESTING SEEDS.

**விதைகளை பரிசோதித்தல்.**—கலப்பான விதைகளை நிலத்தில் விதைத்தால் களைகளே பயிர்களை விட அதிகத்தாஷ்டீகமாய் வளருமே தவிர பயிர் ஓங்கி வளரமாட்டாது. ஆகையால் மேல்நாட்டார் எந்த விதைகளையும் வாங்கு முன்னமே நன்றாய் பரிசோதித்து சுத்தமாயுள்ள விதைகளையே வாங்குகிறார்கள். இப்படி வாங்கும்போது விதைகளில் முளை உருவக்கூடிய சக்தி இருக்கிறதா அல்லது கெட்டுப்போயிருக்கிறதா வென்று அனேக விதங்களில் பரீட்சை செய்து நூற்றுக்கு 80 முதல் 90 வரை முளைக்கும் விதைகளைத்தான் வாங்குவார்கள். விதைகளை பின் சொல்லிய விதத்தில் சோதிப்பது எளிதாகும்:—

1. பரீக்ஷை செய்யவேண்டிய விதையை ஒவ்வொன்றாய்ப் பொறுக்கி எடுக்காமல் மொத்தமாய் அள்ளி எடுத்து அதிலிருந்து 100 விதைகளை எண்ணி நனைத்த மை ஒத்தும் கடுதாசியிலாவது அல்லது கம்பளியிலாவது வைத்து மூடி இருட்டான இடத்தில் வைத்திருந்து எடுத்துப்பார்த்தால் நூற்றில் எத்தனை முளை உருவுகிறதென்று கண்டு கொள்ளலாம்.

2. ஒரு தொட்டி மண்ணில் குறுக்காகவும் நெடுக்காகவும் 11 கோடுகள் கீறி ஒவ்வொரு சதுரத்திலும் ஒவ்வொரு விதை ஊன்றித் தண்ணீர் ஊற்றி வந்தால் எத்தனை முளைத்தன எத்தனை முளைக்கவில்லையென்று எளிதாய்த் தெரிந்துகொள்ளலாம்.

3. பூமியைக் கொத்தி ஸமனாக்கி 100 விதைகளை எண்ணி விதைத்து அவைகளில் எத்தனை முளைக்கிறதென்றும் அறிந்துகொள்ளலாம்.

சென்னை விவஸாய இலாகா உத்தியோகஸ்தர்களும், விவஸாய சங்கத்தாரும் முளைக்கும் கரு அமைப்புள்ள நல்ல விதைகளை வாங்கி ஆங்காங்கிருக்கும் விவஸாயிகளுக்கு நியாயமான விலைக்கு விற்று வருவார்களானால் அதிக அனுகூலமுண்டாகுமென்று நமக்குத் தோற்றுகிறது. இது ஒவ்வொரு கிருஷிகரும் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய காரியம்.—

கிருஷகன்.

## COMMERCE.
## வியாபாரம்.

BUSINESS ENTERPRISE IN INDIA.

**இந்தியாவில் வியாபார ஊக்கம்.**—இந்தியாவில் போன நவம்பர் மீ'த்தில் அடியில் கண்ட விவரப்படி 32 கம்பெனிகள் ரிஜிஸ்டர் செய்யப்பட்டன. அந்த விவரங்களைக்கொண்டு அந்த மீ'த்தில் வியாபாரத்தில் ஊக்கம் எவ்வளவு இருந்த தென்பதை அறிந்துகொள்ளலாம்.

| | முதல் ரூ. |
|---|---|
| 4 பாங்கிகளும் லேவாதேவி கம்பெனிகளும் | 23,00,000 |
| 8 இன்ஷுரென்ஸ் கம்பெனிகள். | 3,96,000 |
| 1 கோவாபெரேட்டிவ் சங்கம். | 1,00,000 |
| 10 வியாபாரக் கம்பெனிகள் (மேற் சொன்னவைகளைத் தவிர) | 17,80,000 |
| 1. பருத்தி மில் கம்பெனி | 3,00,000 |
| 1. கம்பிளி மில் கம்பெனி | 32,00,000 |
| 2 தேயிலையும் இன்னும் இதர வகைப்பயிர் செய்வதற்குமான கம்பெனிகள். | 4,50,000 |
| 2 சுரங்கம் வெட்டும் கம்பெனிகள். | 5,50,000 |
| 1 நிலம் வாங்கி கட்டிடம் கட்டும் கம்பெனி. | 8,000 |
| 1 பனிக்கட்டி செய்யும் கம்பெனி. | 2,00,000 |
| 1 சர்க்கரை செய்யும் கம்பெனி. | 16,000 |
| 32 ஆக மொத்தம் ரூ. | 93,00,000 |

SHARES IN COMPANIES.

**கம்பெனிகளில் ஷேர்கள்.**—கம்பெனிகளில் ஷேர், அதாவது, பங்குகள் வாங்குபவர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய தீர்ப்பு ஒன்று இங்கிலாந்தில் ஸமீபத்தில் செய்யப்பட்டிருக்கிறது. கம்பெனி ஏற்பாடான பிறகு அதற்குவேண்டிய முதலைச் சேர்ப்பதற்காக, அதைப்பற்றி விவரங்களை யெல்லாம் எடுத்துக்காட்டி ப்ராஸ்பெக்ட்ஸ் என்பதாக ஒரு பத்திரம் வெளிப்படுத்துவது வழக்கம். இந்த ப்ராஸ்பெக்டஸை வாசித்து கம்பெனியில் பங்கு எடுத்துக்கொண்ட ஒருவன் அதில் மோசடியான ஸங்கதிகள் வெளியிட்டிருந்ததை நம்பி பங்குவேண்டுமென்று அப்ளிகேஷன் செய்துகொண்டதோடு அனுப்பிய பணத்தை திருப்பிக்கொடுக்கவேண்டுமென்று கோர்ட்டில் வ்யாஜ்யம் செய்தான்.

இதற்கு பிரதிவாதி கம்பெனியார்என்ன எதிர் வ்யாஜ்யம் ஆடினார்களென்றால், மோசடியென்று எப்பொழுது தெரிந்ததோ உடனே பங்கு எடுத்துக் கொண்டதை பூர்த்திசெய்யமாட்டேனென்று சொல்லாமல், 6மீ' கழித்து அப்படிச்சொல்வது ஸரியல்லவென்று சொன்னார்கள். ஜட்ஜி இந்தவாதத்தை ஒப்புக்கொண்டு செலவு தொகையோடு கேஸைத் தள்ளிவிட்டார். இதனால் என்ன ஏற்படுகிறதென்றால், கம்பெனி மோசம் செய்ததாகத்தோன்றி பங்குக்காகக்கொடுத்த பணம் திரும்பிக்கிடைக்கவேண்டுமானால், ஷேரை வைத்துக்கொள்ளுகிறது இல்லை என்பதை உடனே தீர்மானித்துக்கொள்ள வேண்டும்.

THE TRADE OF INDIA.

**இந்தியாவின் வியாபாரம்.**—இந்தியாவுக்கும் ஐரோப்பா கண்டத்திலுள்ள முக்கியமான தேசங்களுக்கும் நடக்கும் வியாபாரம் பின்வருமாறு:—

| தேசங்கள். | இந்தியாவில் இறக்குமதி. | இந்தியாவிலிருந்து ஏற்றுமதி. |
|---|---|---|
| | பவுன். | பவுன். |
| இங்கிலாந்து. | 52,686,700. | 33,973,300 |
| ஜெர்மனி. | 34,33,300 | 123,40,000 |
| ப்ரான்ஸ். | 13,86,700 | 103,80,000 |
| பேல்ஜியம். | 38,46,700 | 71,80,000 |
| ஆஸ்ட்ரியா. | 21,06,700 | 47,00,000 |
| இட்டலி. | 10,11,800 | 52,00,000 |
| ஹாலந்து. | .. | 17,86,000 |
| ரஷியா. | 1,73,000 | 10,84,000 |
| ஸ்பெயின். | .. | 12,22,000 |

இங்கிலாந்து அல்லாத மேற் சொன்ன மற்ற தேசங்களிலிருந்து வரும் சரக்குகள் இங்கிலாந்தில் செய்து அனுப்பக்கூடியவைகளல்ல. அந்த தேசங்களெல்லாம் இங்கிலாந்தைவிட வெகு அதிகமாய் நம்முடைய தேசத்து சரக்குகளை வாங்குகின்றன. அவைகள் நமக்கு அனுப்பும் சரக்குகளோவென்றால், இங்கிலாந்து அனுப்பும் சரக்குகளில் நாலில் ஒரு பாகந்தானாகிறது. அதாவது, இங்கிலாந்தானது நமக்கு 78 கோடி ரூபாய்க்கு ஸாமான்கள் விற்று நம்மிடமிருந்து 51 கோடி ரூபாய்க்கு ஸாமான்கள் வாங்குகிறது. மேற்கண்டமற்ற தேசங்களோ, நமக்கு 18 கோடி ரூபாய்க்கு ஸாமான்கள் விற்று நம்மிடத்திலிருந்து 64½ கோடி ரூபாய்க்கு ஸாமான்கள் வாங்குகின்றன. ஆகையால் இங்கிலாந்து அல்லாத மற்ற தேசத்தார்கள் தான் இந்தியாவின் வர்த்தகர்களுக்கு நல்ல வாடிக்கைக்காரர்களென்று ஏற்படுகிறதல்லவா?

## INDUSTRY.

## கைத்தொழில்.

DRIED GUTS.

**காயப்போட்ட குடல்கள்.**—பிட்டில் முதலிய வாத்தியங்களுக்குப் போடும் தந்திக்கம்பிகள் ஆடு முதலிய மிருகங்களின் குடல்களைக் காயப்போட்டு பக்குவப்படுத்திச் செய்தவைகள். மிருகங்களின் குடல்களை காயப்போட்டு எவ்வளவு அனுப்பினாலும் அவைகள் முழுமையையும் லண்டன் நகரத்தில் ஒரு கம்பெனியார் வாங்கத்தயாராயிருக்கிறார்களாம். இந்த வியாபாரத்தை வடக்கே ஐக்கிய மாகாணங்களிலுள்ளவர்கள் வெகுவாய்ச்செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். ஷாஜிஹான்பூர் என்னும் ஊரில் நெசவுத் தொழில் செய்யும் துருக்கர்கள் தங்கள் தொழிலில் வேலையில்லாதபோது இந்த புதிய வியாபாரத்தைச் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். ஆடு முதலிய மிருகங்களின் குடல்களை காயப்போட்டு ஏற்றுமதி செய்தால் நல்ல லாபம் கிடைக்கும். நம்முடைய ராஜதானியில் தோல் பதினிட்டு ஏற்றுமதி செய்யும் வியாபாரிகள் இதை கவனிப்பார்களென்று நம்புகிறோம்.

INDUSTRIAL DEVELOPMENT.

**கைத்தொழில் அபிவிர்த்தி.**—தற்காலத்தில் அநேகம் பேர்கள் கைத்தொழில்களை ஸ்தாபித்து லாபம் ஸம்பாதிக்க வேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆனால் அப்படிச் செய்வதற்கு அபார ஸாமர்த்தியம் வேண்டும். யந்திரங்களை உபயோகித்து ஸாமான்களைச் செய்வதற்கோ, அல்லது செய்த ஸாமான்களை விற்பதற்கோ, எவ்வளவோ புத்தி தீக்ஷண்யமும், சாதுர்யமும், தேவை. வரவர, கைத்தொழில்களை அல்பஸ்வல்பமாய் ஆரம்பிப்பதில் பிரயோஜனமில்லை. தற்காலத்தில் வெவ்வேறு மனுஷர்கள் ஒவ்வொரு பாகத்தைச் செய்து கடைசியாக ஒரு ஸாமானாகிறது. ஸாமான்களை இதர தேசங்களுக்கு ஏற்றுமதி செய்வதில், ஒரு தேசத்தாரே ஒருவருக்கொருவர் போட்டி போடுகிறதோடு, மற்ற தேசத்தாரோடும் போட்டி போடவேண்டியிருக்கிறது. இவைகளோடு, கூலிக்காரர்களுடன் மாரடிப்பது ஒரு பெரும் கஷ்டம். ஸாமான்களைச் செய்வதிலோ வேன்றால், முறைகள் வெகு நுட்பமாக இருக்கின்றன. ஆகையால் தற்காலத்தில் கைத்தொழில்களில் இறங்குவதில் முதலாளிக்கு எவ்வளவு ஸாமார்த்தியமும், உலக ஞானமும், ஆட்களை மேய்க்கும் சக்தியும், வேண்டுமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை. முதலாளி, ஒத்தாசைக்காக வைத்துக்கொள்ளும் உதவிகளுக்கும் இப்படிப்பட்ட குணங்கள் அவசியம். என்ன முதலாளி இருந்தபோதிலும், அவன் மேற்பார்வையையே வைத்துக்கொள்ளலாமே யொழிய, பாக்கி வேலைகளை யெல்லாம் உதவிகள்தானே பார்க்கவேண்டும். ஆகையால் முதலாளிகளின் உதவிகளும் நன்றாய்ப்படித்தவர்களாயும், வேலைத்திறமையுள்ளவர்களாயும், மனுஷ்யாள் ரீதி, உலக நடவடிக்கைகள், இவைகளை அறிந்தவர்களாயும் இருக்கவேண்டியது அவசியம். இப்படிப்பட்டவர்கள் அகப்படுவது வெகு துர்லபம். விசேஷமாய்ப் படித்து புத்திசாலியாயுள்ளவர்கள் வக்கீல் தொழில், கவர்ன்மெண்டு ஸர்விஸ், முதலியவைகளை விட்டு வியாபாரம் கைத்தொழில்களில் புகுந்தாலொழிய கைத்தொழில்களுக்கு தகுந்த மனுஷ்யர்கள் கிடைப்பது கஷ்டந்தான்.

SHODDY.

**கழிபட்ட கம்பளி மயிராலான துணி.**—கம்பளித்துணிகளை சட்டைக்காக தையற்காரியத்திற் கொடுத்தால் அவர்கள் வெட்டும்பொழுது துணுக்குகள் விழுகின்றன. தெருக்களில் சேம்பேறிகள் கந்தைத்துணி, கம்பளி, முதலியவைகளைப் பொறுக்குவதையும் நாம் பார்த்திருக்கிறோம். இப்படிக்கெல்லாம் சேரும் கம்பளிக்கந்தைகள் என்னவாகின்றன தெரியுமா? இவைகளை யெல்லாம் சேர்த்து, சுத்தம்செய்து, புதுக்கம்பளி மயிர் கொஞ்சம் சேர்த்து, புதிதான கம்பளி செய்து விற்பனைக்கு அனுப்பி விடுகிறார்கள். இந்தக் கம்பளி செய்யும் விதத்தைக் கொஞ்சம் சொல்லுவோம்: கம்பளிக்கந்தைத்துணுக்கு, முதலியவைகளை பலமான இரண்டு உருளைகளுக்கு ஒரு பக்கத்தில் கொடுக்கிறார்கள். உருளைகளின் மற்றொரு பக்கத்தில் இந்த துணுக்குகள் வெளிப்படும்பொழுது பல பல்லுகள் உள்ள இன்னொரு யந்திரம் அவைகளைப்பிடித்து நூல் நூலாகக் கிழித்துவிடுகிறது. அப்படியான பிறகு பார்த்தால் துணி நெய்வதற்கு உள்ள நூல்போல் இருக்கும். பிறகு ஸாதாரணமாய் துணி நெய்வதற்கு என்ன செய்யவேணுமோ அப்படித்தான் செய்யவேணும். இப்படிபட்ட மயிரோடு நல்ல மயிரையும் வேண்டிய அளவுப்படி சேர்த்து கம்பளியாக நெய்து நல்ல லாபம் ஸம்பாதிக்கிறார்கள். கடைகளில் விற்கும் விலைமலிவான கம்பளித்துணிகள் மேற்சொன்னபடி பழங் கம்பளியிலிருந்து எடுத்த மயிராலானவைகளாகவே யிருக்கும்.

## ECONOMICS.

## பொருளாதாரம்

—:o:—

**The Delhi Loan.**

டில்லிக் கடன்.—போன டிஸம்பர் மீ 12ம் தேதியில் மகாராஜா சக்ரவர்த்தி அவர்கள் டில்லியை இந்தியாவின் தலை நகராக ஏற்படுத்தி, அதற்காக 6 கோடி ரூ இங்கிலாந்தில் கடன் வாங்கப்போவதாக விளம்பரம் செய்தது எல்லோருக்கும் ஞாபகம் இருக்கலாம். இந்தக்கடனை சீமையில் வாங்குவது நியாயமல்லவென்று மதராஸ் மெயில் பத்திரிகை எழுதுகிறது. பிரதானபட்டணத்தை கல்கத்தாவிலிருந்து டில்லிக்குமாற்றினால் இந்தியர்கள் சந்தோஷப்படுவார்கள் என்று செய்தகாரியமாதலால், இதற்கு செலவுக்கு வேண்டிய தொகையை இந்தியர்களே கடன் கொடுக்க விதித்தமாயிருப்பார்கள். ஸாதாரணமாய் வெளியிலிருந்து கடன் வாங்க நியாயம் என்னவென்றால், அதை உபயோகித்து அதற்காக கொடுக்கவேண்டியவட்டிக்கு அதிகமாக லாபம் வருமென்பது தான். இப்படிப்பட்ட லாபம் மேற்சொன்ன டில்லிக் கடனிலிருந்து ஸம்பாதிக்கமுடியாது: டில்லியை தலைநகராய் ஆக்கினதினால் அங்கேயுள்ளமனைகளின் விலை அதிகமாகும். வாங்கின கடன் தொகையிலிருந்து கட்டிடங்கள் கட்டி, ரோட்டுகள் போட்டு, இன்னும் இதரஸௌகரியங்களை செய்யப்போகிறார்கள். கவர்ன்மெண்டார் டில்லியில் கட்டிடங்களுக்கு வாடகைகள் வாங்கியும், இன்னும் வரிகள்போட்டும், கூடும் வரும்படியைக்கொண்டு டில்லிக்கடனுக்கு கொடுக்கவேண்டிய வட்டியையும் முதலையும் கொஞ்சகாலத்தில் உளவடைத்துவிடலாம்; ஆனால், இந்தியாவில் டில்லியைத்தவிர மற்ற இடங்களிலுள்ளவர்களுக்கு டில்லிக் கடனால் ஒருதம்படி லாபம் கிடைக்கப்போகிறதில்லை. அதினால் இந்தியர்களின் வியாபாரம் பொதுவாக விர்த்தியடையப்போகிறதில்லை. இந்தக் கடனானது பொதுவாக இந்திய ஜனங்களின் மேலுள்ள பளுவை ஜாஸ்திப்படுத்துவதால் மேற்சொன்ன கடனை இந்தியாவில் வாங்காமல் இங்கிலாந்தில் வாங்குவது பிசகேயாகும்.

**Profit & Loss.**

லாப நஷ்டம்.—அநேகம் வியாபாரிகளுக்கு கையில் பணம் புரண்டு கொண்டிருக்கும் வரையில் முதல் எவ்வளவு, லாபம் எவ்வளவு, என்பது தெரிகிறதில்லை. இன்னும் லேவாதேவி வியாபாரம், அல்லது, கவர்ன்மெண்டு ப்ராமஸரிநோட்டு, அல்லது, கம்பெனிகளில் ஷேர்கள் வாங்குதல், ஆக வியாபாரம் இப்படி இருக்கும் பக்ஷத்தில், முதலையும் வரும்படியையும் பிரித்துக்கொள்வது இன்னும் ஸங்கடம். ஒரு உதாரணத்தை எடுத்துச்சொன்னால் நன்றாய் விளங்கும். வருஷ ஆரம்பத்தில் ஆயிர ரூபாயை கடன் கொடுத்ததாக வைத்துக்கொள்வோம். வருஷக்கடைசியில் ஆயிரம் ரூ க்கு மேல் இருந்தால் தான் ரூ 1000 போக பாக்கியை வரும்படியென்று சொல்லலாம். இப்படியே மேற்சொல்லிய 1000 ரூ யை சில்லரையாக பத்து இடத்தில் கடன் கொடுத்திருந்தால் சில இடங்களிலிருந்து முதலும் வட்டியும் வருலாகி, இன்னும் சில இடங்களிலிருந்து பணம் வராமலோ அல்லது பாதிப்பணம் வந்தோ இருந்தால், கைக்கெட்டிய பணத்தின் மொத்தம் 1000 ரூ க்கு உட்படும் பக்ஷத்தில் நஷ்டம் என்றும், 1000 ரூ க்கு மேற்பட்டிருந்தால் 1000 ரூ போக பாக்கிதான் லாபமென்றும் வைத்துக்கொள்ள வேண்டியது. இப்படிக்கில்லாமல் வட்டியும் முதலும் வந்த கேஸ்களில் லாபம் வந்ததென்றும், பாக்கி கேஸ்களில் நஷ்டம் வந்ததென்றும் சொல்வது பிசகு. இதே மாதிரியாக 1,00,000, ரூ க்கு கவர்ன்மெண்டு ப்ராமஸரிநோட்டுகள் வாங்கி சில நோட்டுகளை கையிருப்பில் வைத்துக்கொண்டும் மற்றவைகளை விற்றும் வியாபாரம் நடத்துவதில், மொத்தத்தில் வருஷக் கடைசியில் கிடைத்த வட்டி உள்பட மொத்தம் லக்ஷ ரூபாய்க்கு கையிருப்புக்குறையுமானால் நஷ்டமென்றும், அதற்கு மேற்படும் பக்ஷத்தில் லாபமென்றும், ஏற்படுகிறது. இப்படிக்கு எண்ணாமல் வட்டியெல்லாம் வருமானமென்று எண்ணி முதலிலுண்டான நஷ்டத்தைக் கொஞ்சமேனும் கவனியாமல் பலபேர்கள் காலந்தள்ளுகிறார்கள்.

## CO-OPERATION.
## கோவாபரேஷன்.

---

### CO-OPERATION IN BOMBAY.

**பம்பாய் ராஜதானியில் ஐக்கியநாணய அபிவிர்த்தி**—பம்பாய் ராஜதானியில் போனவருஷத்து ஆரம்பத்தில் 208 ஐக்கியநாணயச் சங்கங்களிலிருந்த தாகத் தெரியவருகிறது. போனவருஷத்தில் இந்த சங்கங்களின் மொத்த மூலதனம் 8,29,000 ரூபாயிலிருந்து, ரூ 13,47,000 ஆயிற்று. நகரச்சங்கங்களின் ஸராஸரி நடைமுதல் ரூ 7,412லிருந்து ரூ 11,650 ஆகவும், கிராமச்சங்கங்களின் நடைமுதல் ரூ 2,722 லிருந்து ரூ 2,970 ஆகவும், ஆயிற்று. ஐக்கிய நாணய முறையால் ஏற்பட்டுநடந்துவரும் தானியபாங்கிகள் அவ்வளவாக திருப்திகரமாக இருந்ததாகத் தெரியவில்லை. வருஷ ஆரம்பத்தில் 10 ஐக்கியநாணயச் சக்கிலிகளின் சங்கங்களிருந்தன. வருஷக்கடைசியில் அப்படியான சங்கங்கள் 17 ஆயின. நெசவுக்காரர்களின் சங்கங்கள் வருஷஆரம்பத்திலிருந்தவை போலவே 6 சங்கங்கள்தானிருந்தன.

### CO-OPERATIVE TRAINING.

**கூட்டுத் தொழிலுக் குற்ற பயிற்சி.**—ஐக்கியநாணயச் சங்கங்களின் விஷயமாக ஏற்பட்டிருக்கும் டிஸ்ட்ரிக்ட் பாங்கிகளுக்கும் ஸென்ட்ரல் பாங்கிகளுக்கும் தேர்ந்த சிப்பந்திகள் கிடைக்கும்படிக்கும், கிராமச்சங்கங்களை மேற் பார்த்துவர தகுந்த ஸூபர் வைஸர்கள் கிடைக்கும்படிக்கும், ஐக்கியநாணயச் சங்க விஷயமாகவுள்ள கோட்பாடுகளையும், முறைகளையும், சிலருக்கு போதிப்பதற்காக, வடக்கே ஐக்கியமாகாணங்களில் ஒரு க்ளாஸ் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. இதைப்பற்றி அந்தமாகாணத்து ரிஜிஸ்ட்ரார் எழுதுவதாவது:—

"ஐக்கிய நாணயச்சங்கங்களை மேல் பார்த்துவர அந்தந்த ஜில்லாக்களில் தக்க மனிதர்கள் ஏற்பட்டு ஸரிவர ஆரம்பத்தில் பார்த்துவந்தாலொழிய, அவைகள் கடைத்தேறுவதில்லை. இப்படிப்பட்ட மனிதர்கள் தயாராகும்படி டிஸ்ட்ரிக்ட் பாங்கிகளும் ஸென்ட்ரல் பாங்கிகளும் இன்னும்பல மனுஷர்களும் சிலபேர்களை ஐக்கியநாணய அஸிஸ்டெண்டு ரிஜிஸ்ட்ரார் கீழேயும், இன்ஸ்பெக்டர் கீழேயும் வைத்து, அவர்களுக்கு ஐக்கியநாணயச் சங்கங்களின் முறைகளையும் கோட்பாடுகளையும் போதிக்க வேண்டுமென்று, அனுப்பியிருக்கிறார்கள். இதேமாதிரியாக அந்தமாகாணத்திலுள்ள கோர்ட்டு ஆப்வார்ட்ஸூம் ஜமீன்தார்களும், அவரவர்களுக்கு உட்பட்ட எஸ்டேட்டுகளில் ஐக்கியநாணயச் சங்கங்களை ஏற்படுத்துவதற்காக, அவைகளைப்பற்றிய விஷயங்களையெல்லாம் கற்றுவரசிலபேர்களை மேற்சொன்னக்ளாஸுக்கு அனுப்பியிருக்கிறார்கள். விவஸாயிபணம் எங்கே கிடைக்குமென்று காத்துக்கொண்டிருக்கிறவன்; அதிலும்ஐக்கியநாணயச் சங்கங்களால்ஒரு தொந்தரவு மன்னியில் சொற்பவட்டிக்கு பணம் கிடைக்குமென்று தெரிந்துவிட்டால், எல்லாரும்ஐக்கியநாணயச் சங்கங்களின் மெம்பர்களாகவே இருக்க விரும்புகிறார்கள். ஆனால், மேற் சொன்ன ஸௌகர்யம் கிடைப்பதற்கு, ஒவ்வொருவனும் தன்னுடைய ஸௌகர்யத்தையும், சிரமத்தையும், ஸ்வய நலத்தையும் பாராட்டாமல், பொதுக் காரியத்தில் கருத்தாய், எல்லாரையும் ஒருமிக்கச் சேர்த்து அரவணைத்து கொண்டு போகிறவர்கள் எத்தனை பேர்கள் ஏற்படுகிறார்களோ, அதற்குத் தக்கபடி ஐக்கிய நாணய உணர்ச்சி அபிவிர்த்தியாகும். கோவாபரேஷன் முறையில் எல்லாருங்கூடி காரியங்களைச் செய்யவேண்டுமென்றும், அதனால் சொல்பவட்டிக்குப் பணம் கிடைத்துவிடும் என்றும், இன்னும் இதர நன்மைகள் உண்டாகி விடுமென்றும், சொல்வது எளிது. ஆனால் விவஸாயிகளை ஒருங்கு சேர்த்து, அவர்கள் மேல்சொன்னபடி நடந்துகொள்ளவேண்டுமென்று போதித்து, அவர்கள் அப்படி நடந்து கொள்ளுகிறார்களாவென்று பார்த்து, அவர்களுக்கு அப்படி தானாக நடந்துகொள்ளும் திறமையும் குணமும் ஏற்படுகிறவரையில் அவர்களைப் பார்த்துவர, ஐக்கிய நாணயச் சங்கங்களில் ஊக்கமும் ஞானமும் அனுபோகமும் உள்ளவர்கள் அவசியம். ஆகையால், ஐக்கிய நாணயச் சங்கங்கள் அபிவிர்த்தியாவதற்கு மேலே சொல்லிய க்ளாஸானது அனுகூலமாகவே யிருக்குமென்பதற்கு ஸந்தேகமில்லை.

## BANKING.

## பாங்கி வியாபாரம்.

### MORAL OF THE BANK OF BURMA FAILURE.

**பர்மா பாங்கி முறிந்ததிலிருந்துவந்த புத்தி.**—இந்த பாங்கி முறிந்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு. அந்தபாங்கி பர்மாவிலுள்ளகம்பெனிகளுடையஷேர்களின் (பங்குகளின்)மேல் கடன் கொடுத்தவகையில் ஷேர்களின் விலைகுறைந்து அதனால்வந்த நஷ்டம் ஒரு காரணம்; கடன் கொடுத்ததெல்லாம் விசேஷமாய் ஒரே இனத்தில் கொடுத்ததுஇரண்டாவது காரணம். இந்த பாங்கி மோவர் என்பவருடையவும் அவரைச் சேர்ந்தவர்களுடையவும்ஆதீனத்திற்கு உட்பட்ட கெரொஸின் எண்ணெய்வியாபாரம்செய்யும் கம்பெனிகளுக்கு கடன் கொடுத்தது. இந்த கெரொஸின் எண்ணெய் எடுக்கும் கம்பெனிகளின் வியாபாரம் குறைந்து, அவைகளின் ஷேர்கள் விலையில் குறையவே, பாங்கிக்கு நஷ்டம் வந்தது. பாங்கிகளின் பணத்தையும் இன்ஷ்யூரென்ஸ் கம்பெனிகளின் பணத்தையும் எப்பொழுதும் தகுந்த ஜாமியன்பேரிலும் ஸொத்துக்களின்பேரிலும் கொடுக்கவேண்டும். டிபாஸிட்டர்களுக்கு அதிக வட்டி கொடுப்பதாக அவர்கள் பணத்தை வாங்கி, அதின்மேல் லாபம் ஸம்பாதிக்கிறதற்கு மனம் தோன்றினபடி கண்ட வியாபாரிகளுக்கு அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு பாங்கியின் பணத்தை வாரிவிட்டால், பாங்கிமுறியாமல் என்ன செய்யும்? இப்படி செய்ததினால்தான் பர்மா பாங்கிக்குக் கேடு வந்தது. இந்த ஸந்தர்ப்பத்தில் பாங்கிகளில் பணம் டிபாஸிட்டு செய்கிறவர்களுக்கு பொதுவாக நாம் ஒன்று சொல்லத்துணிகிறோம். முக்கியமாய் டிபாஸிட்டர்களின் பணத்தை வாங்கித்தான் பாங்கிகள் வியாபாரம் செய்து லாபம் ஸம்பாதிக்கின்றன. டிபாஸிட்டர்களுக்கு பாங்கிகள் என்ன வட்டி கொடுக்கின்றனவோ அதற்குமேல் நூற்றுக்கு இரண்டு அல்லது மூன்று வீதம் அதிகமாக ஸமயத்துக்குத் தக்கபடி வட்டிபோட்டு பாங்கிகள் பணத்தை கடன்கொடுக்கின்றன. ஸொத்துள்ளவர்களும் நாணயமுள்ளவர்களும் அதிகவட்டி கொடுத்து கடன் வாங்கமாட்டார்கள். கொடுத்த கடன் திரும்பிவருவது ஸந்தேகமாயுள்ள இடங்களில்தான் அதிக வட்டிவாங்கலாம். ஆகவே, நல்ல ஜாமியனின்பேரில் கடன்கொடுக்கும் பாங்கிகள் டிபாஸிட்டர்களுக்கு அதிகவட்டி கொடுக்கமுடியாது. டிபாஸிட்டர்களுக்கு அதிகவட்டி கொடுக்கும் பாங்கிகளில் பணம் போடுவது சிலாக்கியமல்ல; முதலுக்கே ஹானிவந்துவிடும்.

### A NEW BANK IN BOMBAY.

**பம்பாயில் ஒரு புதிய பாங்கி.**—சென்ற டிஸம்பர் மாஸத்தில் ஸெண்ட்ரல் பாங்கி ஆப் இந்தியா லிமிடெட் என்பதாக ஒரு புதிய பாங்கி பம்பாயில் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு நமது தேசத்து பிரமுகரும் தேசாபிமானியுமாகிய ஸர் பிரோஸிஷா மேட்டா சேர்மன். இந்த பாங்கியின் மொத்த முதல் 50 லக்ஷ ரூபாய்வரையில் போகலாம். இந்த மொத்த முதலை லக்ஷம் ஷேர்களாகப் பிரித்து ஷேர்ஒன்றுக்கு 50 ரூபா என்று வைத்திருக்கிறார்கள். சென்ற சில வருஷங்களில் சில நல்ல பாங்கிகள் பம்பாயில் ஏற்பட்டிருக்கின்றன. அப்படியிருக்க இன்னொரு பாங்கிக்கு இடமுண்டாவென்று விசாரிப்பது நியாயமாகும். புதிதாய் ஏற்பட்ட பாங்கியின் கர்த்தர்கள், ஒருவருக்கும் இப்பொழுது வரும் லாபத்திற்குறையாமல் எல்லா பாங்கிகளுக்கும் நல்ல லாபம் கிடைக்குமென்று சொல்லுகிறார்கள். பம்பாயில் நாளுக்கு நாள் வியாபாரம் அதிகமாகிக்கொண்டு வருகிறது. கடைசியாய் வெளியான கணக்குப்படி அந்தப் பட்டணத்தின் ஒருவருஷத்து மொத்த வியாபாரம் 185 கோடி ரூபாய் ஆகிறது, அதாவது, முந்திய வருஷத்தைவிட 22 கோடி ரூபாய் ஒரு வருஷத்தில் அதிகம். இந்த அதிக வியாபாரம் ஏற்றுமதி இறக்குமதியாகிய இரண்டுவகையிலும் இருக்கிறது. இந்த அதிக வியாபாரம் பாங்கிகள்செய்த பண ஒத்தாசையால் உண்டானது. பாங்கிகளோடுபத்து வரவுசெய்வதால் பல நன்மைகள் உண்டென்று வியாபாரிகளுக்குத்தெரிய, அவர்கள் தங்கள் கையில் பணத்தை வைத்துக்கொள்ளாமல் கேட்டபொழுது கிடைக்கும்படியாயும் தவணைக்கும் தங்கள் பணங்களை பாங்கிகளில் போடுகிறார்கள். தவிர, தேசத்தில் படிப்பு விருத்தியாக ஆக, முன்காலத்தில் அங்கங்கேயுள்ள வியாபாரிகளிடத்திலும் செட்டிகளிடத்திலும் வட்டிக்கு விட்டிருந்த பணங்கள் இப்பொழுது பாங்கிகளில் வந்து விழுகின்றன. இந்தப்பணங்களை வாங்கி வியாபாரிகளுக்கு சொற்ப வட்டிக்குக் கொடுத்து பாங்கிகள் தங்களுக்கு லாபம் ஸம்பாதித்துக்கொள்ளுகின்றன. பாங்கிகள் வர்த்தகர்களுக்கு பண உதவி செய்வதால் அவர்கள் வியாபாரத்தை விருத்திசெய்ய ஹேது உண்டாகிறது. ஒவ்வொரு தேசத்தின் க்ஷேமம் அதன் வியாபாரத்தைப்பொருத்தது. வியாபாரம் விருத்தியாவது வியாபாரிகளுக்கு பாங்கிகள் எவ்வளவு ஒத்தாசை செய்யக்கூடுமோ அதைப் பொருத்ததாயிருக்கிறது.

## INSURANCE.

## இன்ஷ்யூரென்ஸ்

LIFE ASSURANCE BILL.

**லைப் இன்ஷியூரென்ஸ் மசோதா.**—நம்முடைய ராஜதானியில் எல்லாரும் திவான் பகதூர் கே. கிருஷ்ணஸாமிராவை அறிவார்கள். இவர் திருவாங்கூர் ராஜ்யத்திற்கு மந்திரியாக இருந்து, பென்ஷன் பெற்று தற்போது ஜனங்களின் நன்மைக்காக உழைத்துவருகிறார். இவர் யூனைடெட் இந்தியா லைப் அஷ்ஷியூரென்ஸ் கம்பெனி என்னும் இன்ஷ்யூரென்ஸ் கம்பெனியின் அக்ராஸனாதிபதியா யிருக்கிறார். இவர் ஸமீபத்தில் வெளியான இந்தியன் ரிவியூ என்னும் மாஸாந்திரப் பத்திரிகையில் புதிதாய் ஏற்படப்போகும் இன்ஷ்யூரென்ஸ் ஆக்டைப் பற்றி ஒரு வியாஸம் எழுதியிருக்கிறார். இன்ஷியூரென்ஸ் என்பது இன்னதென்றும், ஏற்படப்போகும் ஆக்டின் அம்சங்கள் இன்னவையென்றும், சென்ற 1911-௵த்து ஸெப்டம்பர் ௴த்து ஸஞ்சிகையின் 455, 456-வது பக்கங்களில் விளக்கி எழுதியிருக்கிறோம். கிருஷ்ணஸாமிராவ் எழுதிய வியாஸத்தின் ஸாராம்சம் பின் வருமாறு:—

(1) இந்தியர்களால் ஏற்படுத்தப்பட்டு லைப் இன்ஷியூரென்ஸ் வியாபாரம் செய்யும் கம்பெனிகளை கவர்ன்மெண்டாரிடத்தில் பணம் டிபாஸிட்டுசெய்ய வேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்ய அவசியமில்லை.

(2) அப்படிப் பணம் டிபாஸிட்டு செய்யவேண்டுமென்று சட்டம் ஏற்படும் பக்ஷத்தில், டிபாஸிட்டு தொகையானது அந்தந்த கம்பெனிகளின் மூலதனத்துக்குத் தக்கபடி இருக்கவேண்டும். டிபாஸிட்டு உயர்ந்தது லக்ஷரூபாயாகவும், குறைந்தது 25,000 ரூபாயாகவும், இருக்கவேண்டும்.

(3) தற்காலம் வியாபாரம் நடத்திவரும் லைப் இன்ஷியூரென்ஸ் கம்பெனிகளை டிபாஸிட்டு செய்யும்படி நிர்ப்பந்தம் செய்யக்கூடாது.

(4) அப்படி நிர்ப்பந்தப் படுத்துவதாயிருந்தால், அந்தக் கம்பெனிகள் டிபாஸிட்டைக் கொடுக்கமுடியாமல், கம்பெனியை மூடவேண்டியதாக ஏற்பட்டு, அதனால் கம்பெனிகளில் ஷேர் எடுத்துக்கொண்டவர்களுக்கும் இன்ஷியூர் செய்தவர்களுக்கும் நஷ்டம் உண்டாகாமலிருக்கும்படி சட்டத்தில் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும்.

(5) இங்கிலாந்திலும் இன்னும் இதரதேசங்களிலும் ஏற்பட்டு இந்தியாவில் வந்து லைப் இன்ஷியூரென்ஸ் வியாபாரம் செய்யும் இதர தேசத்துக் கம்பெனிகளையும், கவர்ன்மெண்டாரிடத்தில் தகுந்த டிபாஸிட்டு வைக்கவோ, அல்லது இந்தியாவில் தகுந்த ஸொத்துக்களை வைத்திருக்கவோ, ஏற்பாடு செய்யவேண்டும். இந்தப்பணங்கள் இந்தியர்களுக்குக் கொடுக்கவேண்டிய பணத்திற்கு ஆதாரவாயிருக்கும்.

(6) இன்ஷியூரென்ஸ் கம்பெனிகளின் பேரில் இன்கம்டாக்ஸ், அதாவது வருமானவரி, விதிக்கும் விஷயத்தில் இந்தியா முழுவதும் ஒரேவிதமான நிபந்தனைகள் சட்டமூலமாய் ஏற்படவேண்டும்.

SINGLE PAYMENT POLICIES.

**ஒரேதடவையாய் பணம்கொடுத்து வாங்கும் இன்ஷ்யூரென்ஸ் பாலிஸிகள்.**—பாலிஸி என்றால் பொருளுக்காவது ஆயுளுக்காவது அபாயம்நேரிட்ட காலத்தில் பணம் கட்டிக்கொடுப்பதாக எழுதிக்கொடுத்த உடன்படிக்கைபத்திரம் என்று அர்த்தம். ஒரேதடவையாய் ப்ரீமியம், அதாவது, கட்டணம், கொடுத்துவிட்டு இன்ஷியூர்செய்து பாலிஸியைப் பெற்றுக்கொள்ளலாமென்ற ஸங்கதி அநேகம்பேருக்குத் தெரியாது. இன்ஷியூர் செய்தவர்கள் தவணைப்படி பணம் செலுத்தாவிட்டால் இன்ஷியூரென்ஸ் தொகையை இழந்துவிடும்படி நேரிடும். ஆகையால் ஸாதாரணமாய்மாஸாமாஸமோ அல்லதுகுறிப்பிட்ட தவணையிலோ, பண வரும்படியுள்ளவர்கள் தான் இன்ஷியூர் செய்வது நலமாகும். ஸ்திரமான வரும்படி இல்லாதவர்கள் குறித்தகாலங்களில் கட்டணம் கட்டுவதாக ஒப்பந்தம் செய்துகொண்டு இன்ஷியூர் செய்வது உசிதமல்ல. அப்படிப் பட்டவர்களுக்கு ஒரேதடவையாய் கட்டணம் கட்டிவிட்டு இன்ஷியூர் செய்வது தான் ஸரியான முறையாகும். உதாரணமாக, ஒரு மிராசுதாருக்கு 21-வயது என்றுவைத்துக் கொள்வோம். அவர் கையில் 75-ரூ மிகுந்திருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இந்தப்பணத்தைக் கொடுத்து வேறுகட்டண மில்லாமல் அவருடைய ஆயுளை இன்ஷியூர் செய்யவேண்டுமென்று கேட்டால், அவர் எப்பொழுது செத்தாலும் 225-ரூ கொடுக்க ஒரு இன்ஷியூரென்ஸ் கம்பெனியார் வித்தமாயிருக்கிறார்கள். அதே மனுஷனுக்கு அடுத்த வருஷத்திலும் அதாவது 22-வது வயதிலும் இன்னொரு 75-ரூ யிருப்பதாக வைத்துக்கொள்வோம். அந்தப்பணத்தைக் கொடுத்து மறுகட்டணங்கள் கொடுக்காமல் இன்ஷியூர் செய்கிறவனுக்கு அவன் எப்பொழுது செத்தாலும் அதே கம்பெனியார் 220—8—0 கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். இந்த மாதிரியாக வயதுக்கும் கட்டணத்துக்கும் தக்கபடி ஒரே தடவையாக ப்ரீமியம் செலுத்தி நிரந்தரமாக வரும்படி இல்லாதவர்கள் தங்கள் ஆயுளை இன்ஷியூர் செய்துகொள்வது புத்திசாலித் தனமாகும்.

## EDUCATION.
## வித்யா விஷயம்.

MANUAL TRAINING AND EDUCATION.

**கைப்பழக்கமும் படிப்பும்.**—பிழைப்புக்கு வேண்டிய படிப்புக்கும் கைப்பழக்கத்திற்கும் நெருங்கிய ஸம்பந்தம் உண்டு. படிப்பது எதற்காகவென்றால் ஜனஸமூகத்தில் ஒவ்வொருவனும் க்ஷேமமாக இருக்கவேணுமென்பதற்கே. ஒவ்வருவனும் க்ஷேமமாக இருக்கவேண்டுமானால் ஒவ்வருவனும் ஸம்பாதிக்கக்கூடியவனாகவே இருக்கவேண்டும். அநேகம் பேர்கள் ஸம்பாதிப்பது அவரவர்களுடைய புத்தியைக்கொண்டும் கைகளால் உழைத்துந்தான். ஆகையால் ஒருவனுக்கு படிப்புச்சொல்லிக் கொடுக்கும்போதே கைப்பழக்கத்தையும் ஏற்படுத்துவது அவசியமானது. கைப்பழக்கத்தால் ஸம்பாதிக்க மட்டும் சக்தி ஏற்படுகிறதென்று சொல்லக்கூடாது. கைப்பழக்கத்தால் வர்ணம், ரூபம், லாவண்யம் இவைகளை நன்றாய்ப் பகுத்தறிய திறமையுண்டாகி தற்காலத்தில் மனிதர்களுக்கு உபயோகமாகும் அநேகம் பொருள்களைச்செய்யவும் அனுகூலமாகும். பள்ளிக்கூடத்தில் படிக்கும் அநேகம் பிள்ளைகளுக்கு கைப்பழக்கம் ஏற்பட்டிருக்கும்பக்ஷத்தில் பெரியவர்களான பிறகு அவர்கள் ரொம்ப ஸம்பாதிக்க முடியாமல் போனாலும் பிழைக்கவழியில்லாமல் போகமாட்டார்கள்.

TECHNOLOGICAL INSTITUTE.

**தொழிற்படிப்புக்கான ஒரு காலேஜ்.**—வங்காள கவர்ன்மெண்டார் கல்கத்தாவில் டெக்னலாஜிகல் இன்ஸ்டிட்யூட், அதாவது தொழிற்படிப்புக்கான காலேஜ் ஒன்றை ஏற்பாடு செய்யப் போகிறார்கள். இதற்கு முன்னால் தொழிற்படிப்பு விஷயமாக அந்த கவர்ன்மெண்டார் சில பிரமாதமான யோஜனைகள் செய்திருந்தார்கள். அவைகளாவன:—

ஷிப்பூரிலுள்ள ஸிவில் இஞ்சினீரிங் காலேஜை ராஞ்சியென்னும் ஊருக்கு மாற்றுவது, அஸென்ஸால் என்னும் ஊரில் சுரங்கத் தொழில் ஸம்பந்தமான ஒரு காலேஜை ஏற்படுத்துவது, கல்கத்தாவில் டெக்னலாஜிகல் இன்ஸ்டிட்யூட் அதாவது பொதுவாக தொழில்கள் ஸம்பந்தமாய் ஒரு காலேஜ் ஏற்படுத்துவது. போன மீ௴ த்தில் வங்காள மாகாணத்தில் சில பாகத்தைப் பிரித்து, பீஹார், சோட்டா நாகப்பூர், ஒரிஸா, இவைகளைச் சேர்த்து ஒரு புது மாகாணம் ஏற்படுத்தி, மாறுதல்கள் ஏற்படவே, மேற்கண்ட யோஜனைகளை பூர்த்திசெய்ய ஸரிப்படவில்லை. ஆகையால் கல்கத்தாவில் மட்டும் ஒரு டெக்னலாஜிகல் இன்ஸ்டிட்யூட்டை ஏற்படுத்தக்கூடாதாவென்று யோஜித்துச் சொல்லும்படி வங்காள கவர்ன்மெண்டார் ஒருகமிட்டியை நியமித்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட இன்ஸ்டிட்யூட் ஒன்றை ஏற்படுத்தக்கூடுமானால், எந்த இடத்தில் வைக்கலாம், எவ்வளவு கட்டிடம் தேவை, என்ன சிப்பந்திகள் வேண்டும், ஏற்கனவேயுள்ள காலேஜ்களில் எவைகளைச் சேர்த்துக்கொள்ளலாம், மொத்தமாக செலவு எவ்வளவு பிடிக்கும், ஆகிய இந்த ஸங்கதிகளை யோஜித்துச் சொல்லும்படிக்கும் கேட்டுவிட்டிருக்கிறார்கள்.

TECHNICAL INSTRUCTION.

**டெக்னிகல் அதாவது தொழில் ஸம்பந்தமான படிப்பு.**—போன மாதத்தில் நடந்த டில்லி தர்பாரின்போது பொது ஜனப்படிப்புக்காக வருஷம் ஒன்றுக்கு 50 லக்ஷம் ரூபாய் கவர்ன்மெண்டார் செலவு செய்யப் போவதாகச் சொன்னதை நம்முடைய நேயர்கள் அறிவார்கள். இந்த 50 லக்ஷம் ரூபாயில் கொஞ்சத்தை எடுத்து டெக்னிகல் அதாவது தொழிற்படிப்பை விருத்திசெய்வதற்காக உபயோகிக்கப் போகிறார்கள். ஸுமார் 10 வருஷத்துக்கு முன்னால் இந்தியா கவர்ன்மெண்டாரின் கோடைகால வாஸஸ்தலமாகிய ஸிம்லாவில் சில தகுந்த நிபுணர்கள் கூடி தொழிலாளிகளைப் பழக்குவதற்காக அங்கங்கே சில தொழிற் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டுமென்று சிபார்சு செய்தார்கள். அவர்களுடைய அபிப்பிராயம் என்னவென்றால் பண்டைகால முறைப்படி தொழிலைக் கற்றுக்கொண்டு அதைச்செய்பவர்களைவிட தொழிற் பள்ளிக்கூடங்களில் தேறினவும் அதிகபுத்தியும், திறமையும் கைப்பழக்கமுள்ள தொழிலாளிகள் ஏற்படக் கூடுமென்பதுதான். இப்படிக்கான தொழிற் பள்ளிக்கூடங்கள் பம்பாய், வெங்காளம், நாகப்பூர், ரூர்க்கி, ஆகிய சில இடங்களில்தான் இருக்கின்றன. அவைகளைப்போல் இன்னும் எவ்வளவோ பள்ளிக்கூடங்கள் தேவை. ஆகையால் செலவிடப்போகும் 50லக்ஷ ரூபாயிலிருந்து கொஞ்சத் தொகையை எடுத்து தொழிற் பள்ளிக் கூடங்களுக்கு உபயோகப் படுத்துவதாக வுள்ள எண்ணமானது தேசாபிவிர்த்திக்கு நல்லதேயாகும்.

## ECONOMIC PRODUCTS.
## விலையுள்ள பொருள்கள்.

---

THE USES OF THE LEMON.

எலுமிச்சம்பழத்தின் உபயோகம்.—எலுமிச்சம் பழத்தை எவ்வளவு விதமாக உபயோகப்படுத்தலா மென்று எல்லாருக்கும் தெரியுமோவென்பது ஸந்தே கம். மேல் தோலியை நன்ருய் உரைத்துத்தேய்த்து விட்டு ஒரு புட்டிக்குள் அடைத்து, ஈரமில்லாத காய்ந்த அலமாரியில் வைத்து விடும்பக்ஷத்தில், வருஷம் முழுவதும் பணியாரங்களுக்கும், கறிகளுக்கும் உப யோகித்துக்கொள்ளலாம். மேல்தோலியை மெல் லியதாய் சின்னச்சின்ன துண்டுகளாக நறுக்கி சர்க் கரையும் ஜலமும் சேர்ந்து பொங்கப்பொங்கக்காய் கிற பாகில்போட்டு ஒரு தாம்பாளத்தில் எடுத்து ஊற்றிவிட்டால், அவைகள் சிறு பில்லைகளாகி ஐரோப்பியர்கள் சாப்பிடும் பக்ஷணங்களின்மேல் வைக்க அலங்காரங்களாக உபயோகப்படுகின்றன. தோலோடு பழத்தை துண்டுகளாக நறுக்கி மேலே சொல்லிய பாகில் சில நிமிஷம் போட்டுக்காய்ச்சி எடுத்து உலர்த்திவைத்து விட்டால் அவைகள் நல்ல மாதுரியமானவும் உடம்புக்கு ஸௌக்கியமானவு மான பக்ஷணங்களாகும். ஐரோப்பியர்கள் கேக் என் னும் பணியாரம் செய்வதில் பாலுக்கு பதிலாக எலு மிச்சம்பழத்தை நசுக்கி அப்படியேயோ, அல்லது வேகவைத்தோ, உபயோகப்படுத்துகிருர்கள். அதி ஞல் அந்த பக்ஷணத்திற்கு நல்ல வாஸனை உண்டாகி றது. ஒரு ராத்தல் பழத்திற்கு $1\frac{1}{4}$ ராத்தல் சர்க்கரை சேர்த்து மார்மலேட் என்பதாக ஒருவித விரப்பு செய்யலாம். எலுமிச்சம்பழத்தை ரொம்ப மெல்லிய தான பில்லைகளாக நறுக்கி, 6 ராத்தல் பழத்திற்கு அரை பஞ்சபாத்திரம் ஜவ்வரிசி சேர்த்து, நல்லகளி செய்யலாம். பாதி, துகையல்போல்செய்த எலுமிச் சம்பழமும் இன்னெரு பாதி அதேமாதிரி செய்யப் பட்ட மாரோ என்று சொல்லப்படும் சுரைக்காய் போன்ற கறியையும் சேர்த்து கூழ்போலாக்கி ரொட் டிக்குமேலே தடவவும், பணியாரமாகச் செய்யவும், உபயோகப்படுத்துகிருர்கள். ஆட்டு இரைச்சியை வேகவைக்கும்போதும் வறுக்கும்போதும் எலுமிச்சம் பழச்சாற்றைத்தெளித்தால் நல்ல வாஸனை உண்டா கிறதாம். நல்லவாஸனையில்லாத டீ (தே இலை) யோடு ஒரு எலுமிச்சம் பழத்துண்டத்தைப் போட்டு கஷா யம் இறக்கும் பக்ஷத்தில் அது சாப்பிடக்கூடிய நல்ல வாஸனையுள்ளதாய் விடுமாம். உருளைக்கிழங்கை துண்டுதுண்டாக அறுத்து வருக்கும்போது எண் ணெயோ, நெய்யோ அதோடு கொஞ்சம் எலுமிச் சம்பழ ரஸம் சேர்த்தாலும் ஸரி, அல்லது வெந்த தும் வேகாததுமான பக்குவத்தில் எழுமிச்சம்பழ ரஸத்தில் போட்டு எடுத்தாலும் ஸரி, உருளைக் கிழங்கு வறுவல் நல்ல வாசனையுள்ளதாயிருக்குமாம். ஆட்டு இரைச்சியை வேகவைக்கும்போது விழும் கொழுப்பை பணியாரங்கள் செய்வதற்கும் அல்லது வறுவல்கள் செய்வதற்கும் உபயோகிக்கும்போது உண்டாகும் காரவாசனையை கொஞ்சம் எலுமிச்சம் பழ ரஸத்தைத் தெளித்து எடுத்து விடலாமாம். அஜீ ரணமாயிருந்தால் முக்கால் புட்டி ஜலத்தை பொங் கப் பொங்கக் காய்ச்சி புதிதாய் உரித்து எடுத்த எலுமிச்சம்பழத் தோலியின் மேல் ஊற்றி ஸுமார் 2 மணிநேரம் வைத்திருந்து, அதோடு ஒரு அணு விற்கு கடையில் அகப்படும் பெப்பர்மின்ட் திராவகம் சேர்த்து சாப்பிட்டால் அஜீரணம் தீருமாம். 4 பங்கு எலுமிச்சம்பழ ரஸமும் ஒரு பங்கு சுத்தமான க்ளி ஸரைனும் சேர்த்து மெதுவாக சீப்பிச் சாப்பிட் டால் தொண்டைவலிக்கும் இருமலுக்கும் நல்லது.

சீதளத்திஞலுண்டாகும் வீக்கங்களுக்கும், புண் களுக்கும், கை கால் வெடிப்புகளுக்கும், மேற்சொன் மருந்தை ராத்திரி ராத்திரி தேய்த்து அநேகம்பேர் கள் சுகமடைந்திருக்கிருர்களாம். எலுமிச்சம் பழ ரஸத்தைக் கொண்டு காசி பித்தளைப் பாத்திரங்களை யும் வெள்ளிப் பாத்திரங்களையும் தேய்த்தால் அவை கள் நன்ருய் வெளுக்கும். துருப்பிடித்த செப்புப் பாத்திரங்களுக்கு எலுமிச்சம் பழ ரஸத்தையும் செங்கல்பொடியையும் போட்டுத் தேய்த்தால் அவை கள் நன்ருய்வெளுக்கும். மர ஸாமான்களின்மேல் எண்ணெய்ப் பசை பட்டுவிட்டால் எலுமிச்சம் பழத்தை அருத்துத் தேய்த்துவிட்டால் அதுபோய் விடும்,

## BUSINESS METHODS.

## வியாபாரமுறைகள்.

ADVERTISEMENT.

விளம்பரம்.—அநேக வியாபாரிகள் தங்களுடைய வியாபாரங்களையும் சரக்குகளையும் விளம்பரப்படுத்துவதற்காக காலெண்டர்களையும் அழகான பொம்மைகளையும் அச்சிட்டு பிரசுரம் செய்கிறார்கள். இப்படிச் செய்வதின் நோக்கம் எல்லாம் என்னவென்றால், சரக்குகளை விற்கவும் வியாபாரத்தை விருத்திபண்ணவுந்தான். இந்த நோக்கம் நிறைவேற வேண்டுமானால், வியாபாரிகள் முக்கியமாக ஆறுவிஷயங்களை கவனிக்க வேண்டும்.

முதலாவது, காலண்டர் முதலியவைகளை யாருக்கு அனுப்புகிறோமோ அவர்களுக்கு அது பிரயோஜனப்படத்தக்கதாய் இருக்கவேண்டும்.

இரண்டாவது, அதைப்பார்த்த உடனே அது மனதைக் கவர்ந்து அதில் ஒரு பிரியத்தை உண்டாக்கத் தக்கதாய் இருக்கவேண்டும்.

மூன்றாவது, அதை ஒருதடவை பார்த்துவிட்டு எறிந்துவிடாமல் அது எப்பொழுதும் அடிக்கடி உபயோகப் படக்கூடியதாய் இருக்கவேண்டும்.

நாலாவது, அதைப் பார்த்தவுடனே எந்த சரக்கை விளம்பரப் படுத்துவதற்காக அது போடப்பட்டதோ அந்தச் சரக்கை அது ஞாபகத்துக்குக் கொண்டு வரவேண்டும்.

ஐந்தாவது, அதைப்பார்த்தவுடனே அதில் கண்ட ஸாமானை வாங்கவேண்டுமென்ற ஆசையை அது ஊட்டவேண்டும்.

ஆறாவது, கண்டவர்கள் கேட்டவர்கள் முதலிய எல்லாருக்கும் கொடுக்காமல், மனிதர்களை நிதானித்துப் பார்த்து அவைகளைக் கொடுக்க வேண்டும். வருஷா வருஷம் கிருஸ்த்மஸ் பண்டிகை காலங்களிலும், தமிழ், தெலுங்கு ஆகிய புதிய வருஷங்களின் ஆரம்பங்களிலும், காலண்டர்கள் பொம்மைகள் அச்சடித்து இனமாகப் போட்டுக் கொடுக்கும் வியாபாரிகள் மேற்சொன்னவைகளை கவனிப்பார்களாக.

SUCCESS IN BUSINESS.

வியாபாரத்தில் ஜயம்.—அமெரிக்கா கண்டத்து ஐக்கிய மாகாணங்களில் முக்கிய பட்டணமாகிய சிக்காக்கோ என்னும் நகரத்தில் ஏ. எப். ஷெல்டன் என்று ஒருவர் இருக்கிறார். இவர் ஸாமான்களை விற்பதிலும் வியாபாரங்களை பலப்படுத்துவதிலும் மகா ஸமர்த்தராம். இவர் ஸமீபத்தில் இங்கிலாந்தில் ஒரு முக்கிய பட்டணமாகிய ஷெபீல்டில் வியாபாரத்தை விருத்திபண்ணும் முறையைப் பற்றி அங்குள்ள வியாபாரிகளுக்கு ஒரு ப்ரஸங்கம் செய்தார். அவர் சொன்னவைகளில் சில நாமும் கவனிக்கத்தக்கவைகள். ஒரு தடவை ஒரு ஸாமானை விற்பது ஒரு ஸாமர்த்தியம்; எப்பொழுதும் வியாபாரம் நிற்கும்படியாக நிலை நிறுத்துவது வேறு ஸாமர்த்தியம். வியாபாரத்தை நிலை நிறுத்துவதற்கு வாடிக்கைக்காரர்களை நழுவவிடாமல் சேர்த்துவைத்துக்கொள்வது அவசியம். சரக்கு வேண்டுமானால் தானே வருவான் என்று சொல்லிக்கொண்டு வியாபாரி சும்மா தற்காலத்தில் இருக்கமுடியாது. அந்தக் காலமெல்லாம் போய்விட்டது. அமெரிக்காவின் ஒரு வியாபாரி தொப்பிகள், ஜோடுகள், கோட்டுகள் முதலியவைகளை விற்று வந்தானாம். அவன் என்ன செய்வது வழக்கமாம், 6 மாதத்துக்கு ஒரு தடவை தன்னுடைய வாடிக்கைக் காரர்களுக்கு ஒரு கடிதம் எழுதி தன்னிடத்தில் வாங்கிய ஸாமான்களெல்லாம் ஸரியாய் இருந்தனவாவென்று கேட்பானாம். இல்லை என்று யாராவது சொன்னால், இஷ்டப்பட்டால், ஸாமானை வாப்ஸ் செய்துவிட்டு, வேறுஸாமான்கள் பெற்றுக்கொள்ளலாமென்றும், அல்லது பணத்தை வாப்ஸ் பெற்றுக் கொள்ளலாமென்றும் சொல்வானாம். இப்படிப்பட்ட கடைக்காரனை விட்டுவிட்டு ஏன் வாடிக்கைக்காரர்கள் வேறு கடைக்குப் போவார்கள்?

விளம்பரம் போடுவதைப் பற்றி மிஸ்டர் ஷெல்டன் சொன்னதாவது, வியாபாரத்தில் விளம்பரமென்பது வெந்நீரடுப்பிலிடும் விறகு போலாகும். ஒருதடவை விளம்பரம் போட்டுவிட்டு வியாபாரிகள் ஆர்டர் வரவில்லையென்று சொல்வது எப்படியிருக்கென்றால், வெந்நீரண்டாவுக்கு ஒரு விறகு வைத்துவிட்டு ஜலம் சுடவில்லையென்று சொல்வது போலாகும்.

## FRAUDS AND FAKES.

## மோசங்களும் பித்தலாட்டங்களும்.

**FRAUDS WITH PADDY.**

**நெல் ஸம்பந்தமான சில மோசங்கள்.**—சில பேர்கள் ஸர்க்கார் நிலத்தீர்வை அதிகமென்றும், விளைந்ததில் பாதிவாங்கிக்கொண்டு போகட்டுமே யென்றும், சொல்லுகிறார்கள். அநேக ஸங்கதிகளை உத்தேசித்து இப்படிச் செய்வது தற்சாலத்தில் முடியாத காரியம். அப்படி முடியாதென்பதற்கு ஒரு காரணத்தை இங்கே சொல்லுவோம். தஞ்சாவூர் மகாராஜாவைச் சேர்ந்த முகஸா கிராமங்களில் முன்காலத்தில் அமானியில்கண்டு முதல் செய்து விளைந்ததில் பாதியை எடுத்துக்கொண்டே போனார்கள். இப்படி மகாராஜாவுக்கு நெல் அளக்கும் போது, மிராசுதார்கள் நெல்லோடு பதரைக்கலந்து அளந்துவிடுவது வழக்கம். நெல்லில் பதரைக் கலப்பது ஒரு வகையான மோசம். இப்பொழுது ரெங்கூனில் வேறு ஒரு விதமான மோசம் செய்கிறார்களாம். அங்கேயுள்ள அரிசிமில்களுக்கு நெல் ஸப்ளைசெய்யும் விவஸாயிகள் ஸாதாரண நெல்லோடு "லு" என்று சொல்லப்படும் ஒரு வித நெல்லைக் கலந்துவிடுகிறார்களாம். இந்த "லு" என்னும்நெல் லானது பிந்திநட்டு ஸுலபமாய்ப் பயிராகிவிடுவதோடு தானியங்கள் கனமாயுமிருக்கின்றன. ஆகையால்தான் விவஸாயிகளும் வியாபாரிகளும் இந்த நெல்லை நல்ல நெல்லோடு கலந்துவிடுகிறார்கள். இப்படிக் கலந்த நெல்லை அரிசியாகக் குத்தினால் அதிக ரொம்ப மறு இருப்பதோடு நொய்யும் ஜாஸ்தியாகவிழுகிறது. மறுவைப் போக்க நெல்லை அதிகமாகக் குத்தினால் நல்லநெல்லு அதிகமாகக் குத்துப் பட்டுப்போகிறது. "லு" என்னும் நெல்லை மேற்சொன்னபடி ஏன் கலக்கிறார்கள் என்றால், அதைத் தனியாக விற்றால், அரிசி மில்காரர்கள் வாங்குவதில்லை. இந்தியாவிற்கு அனுப்பினாலோ, அது விற்பனையாகிறதில்லை. ரெங்கூனிலுள்ள அரிசி மில்காரர்கள் மேற்சொன்னமாதிரி நல்ல நெல்லோடு "லு" என்னும் நெல்லைக் கலந்துவிற்றால் அதைவாங்குவதில்லை யென்று விவஸாயிகளுக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

**TINNED MILK.**

**டப்பிப்பால்.**—முலைப்பாலில்லாத குழந்தைகளுக்கு இதரதேசங்களிலிருந்து வரும் டப்பிப்பாலை வாங்கிப் போட்டி அநேகம்பேர்கள் குழந்தைகளை வளர்த்து வருகிறார்கள். மூன்று வருஷத்துக்கு முன்னால் கல்கத்தாவில் இப்படிப்பட்ட பால் ரொம்பவும் இறக்குமதியாயிற்று. அந்தப்பாலை அந்த நகரத்து ஹெல்த் ஆபிஸர், அதாவது, சுகாதார அதிகாரி பரிசோதித்துப்பார்த்து அதெல்லாம் வெண்ணெய் எடுத்தபிறகு பாக்கியுள்ள பாலென்று கண்டுபிடித்து அது ஜனங்கள் சாப்பிடக்கூடியதல்லவென்றும், அதை குழந்தைகளுக்குப் போட்டினால் கெடுதியுண்டாகுமென்றும் சொன்னார். இதேமாதிரியாக டப்பிகளில் அடைத்து இறக்குமதி யாகும் மாம்ஸங்களும் சாப்பிடக்கூடியவை அல்லவென்று சொன்னார். இப்படிப்பட்ட சரக்குகள் இறக்குமதியாயாவதைத் தடுக்க அவர் என்ன சொன்னாரென்றால்,

(1) வெண்ணெய் எடுத்தபால் டப்பியில் அடைத்திருக்கும் பக்ஷத்தில் அந்த விஷயத்தை ஒவ்வொரு டப்பியின் பேரிலும் எழுதவேண்டும். அதோடுகூட குழந்தைகளுக்குப் போட்டக் கூடாதென்றும் எழுதவேண்டும்.

(2) மாம்ஸம், மீன், பால் இவகளைப் போட்டு காற்றுப் புகாமல் நன்றாய் மூடி, ஸீல் செய்த ஒவ்வொரு டப்பியின் மேலும் இத்தனாம் தேதியில் செய்யப்பட்டதென்று குறிப்பிடவேணும். இந்த அபிப்பிராயங்களை வங்காளத்து வர்த்தகசங்கத்தாரும் அங்கீகரித்து அந்த கவர்ன்மெண்டாருக்கு சிபார்சு செய்தார்கள். ஆனால் இதுவரையிலும் ஒன்றும் ஆனதாகத்தெரியவில்லை. ஏதன் மத்தியில், வழக்கம் போல் மேற்சொன்ன டப்பிப்பால்கள் இறக்குமதியாகிவருகின்றன. ஸமீபத்தில் சீனாவிலுள்ள, ஹாங்காங்கு என்னும் பட்டணத்தில் இதன் விஷயமாக ஒரு சட்டம் செய்திருக்கிறார்கள். அதன்படி ஒவ்வொரு டப்பியின் மேலும் "இது வெண்ணெய் எடுத்தபால், குழந்தைகளுக்குப் போட்டக்கூடாது" என்று எழுதியிருக்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் அபராதம் போடலாம். அல்லது மூன்றுமாதம் காவலில் வைக்கலாம். தற்காலத்தில் இந்தியாவில் குழந்தைகள் கணக்கில்லாமல் சாகிறபடியால் டப்பிப்பால் வியாபாரத்தை சீர்திருத்த சட்டமேற்படவேண்டியது ரொம்ப அவசியம்.

## MACHINERY AND INVENTION.

## யந்திரங்களும் நூதனகற்பிதமும்

BRITISH MACHINERY IN INDIA.

**இந்தியாவிற்கு இங்கிலீஷ்காரர்களுடைய யந்திரங்கள்.**—இங்கிலீஷ்காரர்கள் ஏற்றுமதி செய்யும் யந்திரங்களில் பெரும்பாகம் இந்தியாவிற்கே ஏற்றுமதி செய்யப்படுவதாகத் தெரியவருகிறது. உலகத்தில் இங்கிலீஷ் ராஜாங்கத்தைச்சேர்ந்த மற்ற தேசங்களில் எவ்வளவு யந்திரங்கள் வாங்குகிறார்களோ அவ்வளவு யந்திரங்களை இந்தியா ஒன்றில் மட்டும் வாங்கிவருகிறார்களாம். வாஸ்தவம் என்னவென்றால், இந்தியாவில் கைத்தொழில்கள் விருத்தியாகத் தொடங்கியிருக்கின்றன. ஆதலால் கூலியாட்களோடு யந்திரங்களையும் கொண்டு வரவர வேலைசெய்துவருகிறார்கள். இன்னொரு விசேஷம் என்னவென்றால், இந்தியர்களே யந்திரங்களை வாங்கி வருகிறார்கள். அதனால் அவர்கள் கைத்தொழில்களில் ஏற்பட்டுவருகிறார்களென்று, ஊகிக்க வேண்டியிருக்கிறது.

BURGLAR PROOF JEWEL CASE.

**திருடர்கள் உடைக்கமுடியாத நகைப்பெட்டி.**—இந்தியாவில் ஸ்வல்ப விலையாயினுமுள்ள நகைகளைப் போட்டுக்கொள்ளாத ஸ்திரீகள் மிகவும் சிலரே இவர்களுடைய நகைகளை ஸுலபமாய்த் திருடக்கூடாமல் அதற்கேற்ற ஒரு பெட்டி லண்டனில் ஒரு கடையில் வைத்திருக்கிறார்கள். அந்தப்பெட்டியை வைத்த இடத்திலிருந்து நகர்த்தினால் அது ஓயாமல் மணிஅடிக்கிறது. அந்த மணி அடிப்பது அந்தப்பெட்டியின் சாவியையுடையவன் வந்து நிறுத்தினாலொழிய நிற்பதில்லை. ஆகையால் அப்படிப்பட்ட பெட்டிகளை திருடர்கள் தூக்கிக்கொண்டு போவது ரொம்பவும் கஷ்டம். ரெயில்களில் பிரயாணம் செய்கிறவர்கள் இப்படிப்பட்ட பெட்டிகளை உபயோகித்தால் ஸாமான்களை திருடுவது ஸாத்தியப்படாது.

A STONE GATHERING MACHINE.

**ஒரு கல்லரிக்கும் யந்திரம்.**—கல் பாங்கான நிலங்களில் கல்லுகளை அரிப்பதற்காக ஆஸ்திரேலியாவில் பர்ன்ஹாம் என்னும் ஒரு எஞ்சினியர் ஒரு யந்திரம் கண்டுபிடித்திருக்கிறார். அங்கேயுள்ள நியூஸௌத் வேல்ஸ் என்னும் மாகாணத்தில் மேற்சொன்ன யந்திரத்தை ஸமீபத்தில் பரிசோதனை செய்தார்கள். அந்தப் பரிசோதனையை கூட இருந்து பார்த்த அந்த மாகாணத்து விவஸாய இன்ஸ்பெக்டர் அந்த யந்திரத்தைப்பற்றி பின்வருமாறு எழுதுகிறார் :—

"இந்த யந்திரம் ஒரு மணி வேலை செய்து ஒரு ஏகராவிலுள்ள கல்லுகளைப் பொறுக்கிவரிசை வரிசையாகக் குவித்து விட்டது. வேலை செய்தது நன்றாயிருந்தது. இந்த தேசத்திலும் இன்னும் கல்லுகளுள்ள நிலங்களடங்கிய இதர தேசங்களிலும் இந்த யந்திரம் உபயோகப்படும். வேலையான பிறகு யந்திரத்தைப் பரிசோதித்துப் பார்த்த பொழுது இரண்டு பல்லுகள் முறிந்தும் அநேகமாய் எல்லாப் பல்லுகளும் வளைந்தும் இருந்தன. இந்தக் குறைகளை சீர்ப்படுத்திவிடலாம். அப்படி சீர்ப்படுத்தும் வரையில் அந்த யந்திரத்தை வாங்கும்படி நான் சிபார்சு செய்யமாட்டேன்; இந்தயந்திரத்தை ஆறு குதிரைகள் இழுத்தன. ஆனாலும் அவைகளுக்கு வேலை கடினமாகவே இருந்தது. இப்படிக்கெல்லா மிருந்தபோதிலும் கல்லுகளை கையாலரிப்பது ஜாஸ்தி பணச்செலவாதலால் யந்திரம் நல்லதென்று தோன்றுகிறது."

இந்தியாவில் கல் நிறைந்த நிலங்கள் எவ்வளவோ இருக்கின்றன. கல்களை அரித்து எடுப்பதற்கு ரொம்பசெலவு பிடிக்குமாதலால், அப்படிப்பட்ட நிலங்களை ஸாகுபடிக்குக் கொண்டுவரமுடியவில்லை. அப்படிப்பட்ட நிலங்களுக்கு மேற்சொன்னயந்திரம் ரொம்ப உபயோகமாக விருக்கும். ஆனால் யந்திரத்தை இழுப்பதற்கு குதிரைகளுக்கு எங்கே போவது? நம்முடைய மாடுகளோ அதை இழுக்க முடியாது. ஸ்டீம் அதாவது நீராவி இஞ்சினைக் கொண்டு மேற்சொன்ன யந்திரத்தை இழுக்கலாம். ஆனால் அதுவும் ஸாமான்யமான விவஸாயிகளுக்கு எட்டக்கூடியதல்ல.

## LAW.
## சட்டம்.

THE GAEKWAR IN COURT

**கைக்துவார் கோர்ட்டுக்கு இழுக்கப்பட்டார்.**—லண்டனில் ஒரு கோர்ட்டில் ஒருவர்தனது மனைவியின் விவாக சம்பந்தத்தை நீக்கி அவளை விலக்க வேண்டுமென்று கொண்டுவந்த கேஸில் கைக்குவார் மகாராஜாவைச் சம்பந்தப்படுத்தியிருந்தான். நல்ல வேளையாய்த் அந்தகேஸ் தள்ளுபடியாய் விட்டது. பரோடா மகாராஜா ப்ரிட்டிஷ் அரசரின் சம்ரக்ஷணையிலிருக்கும் ஸ்வாதீனம் பெற்ற மன்னரென்று இந்தியா ஆபீஸிலிருந்து ஒரு ஸர்டிபிகேட் தாக்கல் செய்தபடியால் அவர் ப்ரிட்டிஷ் கோர்ட்டில் மற்றொருவர் பேரில் வியாஜ்யம் செய்யப் பாத்திய முண்டாயினும், அவர்மீது வியாஜ்யம் கொண்டுவர எவருக்கும் பாத்தியமில்லை யென்று அந்தக்கேஸ் தள்ளுபடி செய்யப்பட்டது.

WILL AFTER TRUST DEED.

**ட்ரஸ்ட் ஆதாரவுக்குப் பிந்திய உயில்.**—சென்னப்பட்டணத்தில் லக்ஷ்மி அம்மாள் என்ற ஒரு ஸ்திரி தான் மிகவும் நோயாயிருந்த ஸமயத்தில் தான் இறந்துபோகக் கூடுமென்று எண்ணி தன்னுடைய ஸொத்துக்களை மானேஜ்மெண்டுசெய்து வரும்படியாக சில ட்ரஸ்டிகளை நியமித்து, ட்ரஸ்ட் ஆதாரவு எழுதி ரிஜிஸ்டரும் செய்து வைத்தாள். அந்த ஸமயம் இறந்துபோகவில்லை. அதன்பிறகு அந்த ட்ரஸ்ட் ஆதாரவைக் கிழித்து எறிந்துவிட்டு, ஒரு உயில் எழுதி, அந்த உயில் மூலமாக ஸொத்தை வாதிக்குக் கொடுத்தாள். லக்ஷிமி அம்மாளுடைய எஸ்டேட்டைச் சேர்ந்த ஒரு வீடு இருந்தது. அதில் பிரதிவாதி குடியிருந்து வந்தார். அந்த வீட்டின் வாடகை விஷயமாக கூடுதலான தொகையைப் பெறுவதற்கு வாதி பிரதிவாதியின்பேரில் ஒரு வியாஜ்யம் கொண்டுவந்தார்.

லக்ஷிமி அம்மாள் தன்னுடைய எஸ்டேட்டிற்கு ட்ரஸ்டிகள் நியமித்திருக்கிறாள். வாதி வாடகை கேட்கப் பாத்தியமற்றவர் என்பதாக பிரதிவாதி கக்ஷியாடினார்.

ட்ரஸ்ட் ஆதாரவு ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது. அதைக் கிழித்து எறிந்ததினால், ட்ரஸ்டிகளுக்கு உள்ள பாத்தியதை போய்விட மாட்டாது. ஆகவே, ட்ரஸ்ட் ஆதாரவு செலாமணியாகக் கூடியதென்று வாதியின் வியாஜ்யத்தை அஸல் கோர்ட்டார் தள்ளுபடி செய்துவிட்டார்கள். இந்தத் தீர்ப்பின்மேல் ஹைக்கோர்ட்டுக்கு வாதி அப்பீல் செய்துகொண்டார்.

அப்பீல் வாதியின் முதல் கக்ஷி என்னவென்றால், ட்ரஸ்ட் ஆதாரவு ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்த போதிலும், அது ட்ரஸ்ட்டிகளிடம் ஒப்புவிக்கப்படவில்லை. அப்படி ஒப்புவிக்கப்படாமலிருக்கிறபோது அது ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருப்பதை முன்னிட்டு ட்ரஸ்ட் ஆதாரவில் காணப்பட்ட எஸ்டேட்டின் பாத்தியதை ட்ரஸ்ட்டிகளுக்குச் செல்லமாட்டாது என்பதே. ஆதாரவு ரிஜிஸ்டர் செய்யப்பட்டபோதிலும், பாத்தியதை ட்ரஸ்ட்டிகளுக்குப் போகக்கூடாதென்பீது எண்ணமாயிருந்தால் மேல்சொன்ன கக்ஷி ஸரிதான். ஆனால் இந்தக் கேஸிலோ அப்படி அல்ல. லக்ஷிமி அம்மாள் இந்த ஆதாரவை எழுதி ரிஜிஸ்டர் செய்த ஸமயத்தில், ஆதாரவால் ட்ரஸ்ட் ஸொத்தின் பாத்தியதை ட்ரஸ்ட்டிகளுக்குச் சென்றுவிட வேண்டுமென்பதே அவளுடைய கருத்து.

அப்பீல் வாதி இன்னொரு கக்ஷியும் சொன்னார். அதென்னவெனில், அப்பீல் பிரதிவாதி அப்பீல் வாதியிடம் இதற்குமுன் வாடகை செலுத்தி வந்திருக்கிறபடியால், இப்போது அப்பீல் வாதியின் பாத்தியதையை ஆக்ஷேபிப்பதிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறார் என்பதே. அப்பீல் பிரதிவாதியைக் குடி வைத்தவர் அப்பீல் வாதியல்ல. மேலும், வாடகை அப்பீல் வாதியிடம் செலுத்தியிருந்த போதிலும் அப்பீல் வாதிக்கும் வாடகைக்கும் யாதொரு பாத்தியமுமில்லை என்று கக்ஷி சொல்ல அப்பீல் பிரதிவாதி பாத்தியமுடையவர்.

அஸல் தரப்பு கோர்ட்டார் அப்பீல் பிரதிவாதி அப்பீல் வாதியிடம் வாடகை செலுத்தியிருப்பதாக ருஜுப்பட்டிருக்கிறதென்று தீர்மானித்திருந்தபோதிலும், அவர் அப்பீல் வாதியிடம் வாடகை எந்தக் காலத்திலும் செலுத்தினதில்லை யென்று கக்ஷி சொல்லும்போது, அப்பீல் வாதிக்கும் வீட்டிற்கும் யாதொரு பாத்தியமுமில்லை என்று ருஜுப்படுத்தும் பாத்தியதையிலிருந்து அப்பீல் பிரதிவாதி விலக்கப்பட்டவரல்ல என்று அபிப்பிராயப்படுவதாகச் சொல்லி ஹைக்கோர்ட்டார் கேஸைத் தள்ளிவிட்டார்கள்.

## MEDICINE.
## வைத்தியம்.

RICE FOOD.

அரிசி உணவு.—அரிசி உணவு எல்லா உணவிலும் சீக்கிரம் ஜீரணமாகக்கூடியது. வலிவு குறைந்த வயிற்றுக்கும் குழந்தைகளுக்கும் அரிசி உணவு சிரேஷ்டம்.

PREVENTING CHOLERA.

வாந்திபேதி வருமுன் காத்தல்.—வாந்திபேதி வராமற் காப்பதற்கு ஒரு சிறந்த வழி உண்டு. அது அநேகருக்குத் தெரிந்திருக்கும். ஆயினும் அதைத் திருப்பித்திருப்பிச் சொல்வதும் எழுதுவதும் கூறியது கூறல் என்னும் குற்றமாகாது. ஏனெனில், அறியாத சிலரும் அறிந்து கொள்ளவும், அறிந்தவர்களும் அந்தவிதியை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவராவிட்டால் அப்படிச் செய்ய ஏவவும் கூறியதைக் கூறவேண்டும். அந்தவிதி யென்ன வென்றால் :—குடிக்கிற தண்ணீரை நன்ருகக் கொதித்தபின் மூடிவைத்துக்கொண்டு வேண்டிய வேளைகளில் திறந்து உபயோகிப்பதுதான். ஒருமுறை சுடவைத்த தண்ணீரை ஒருநாளைக்கு உபயோகிக்கலாம். வேண்டிய தண்ணீரைப் பானையில் சுடவைத்து அந்தப் பானையை உலைமூடியினல் தூசு விழாதபடி பத்திரமாய் மூடிவைத்துக்கொள்ள வேண்டியது. தண்ணீரைச் சூடாக்கும்போது ஒரு கொதி கொதித்தவுடன் போதுமென்று விடப்படாது. அந்தத் தண்ணீர் நன்ருகக் கொதிக்கவேண்டும். தண்ணீரை மூடிவிட்டால் சூட்டினல் இறந்த பேதிக்குரிய பூச்சிகள் திரும்ப உண்டாக இடமில்லை. இந்த விதியைச் சிலர் பேதி வியாதிகாலங்களில் கைக்கொண்டு வருகிருர்கள்; சிலர் எக்காலத்திலும் கைக்கொள்ளுகிருர்கள். சிலர் இப்படிச் செய்வது அவசியமில்லை, விதிப்படி நடக்கும் என்கிருர்கள். வேறு சிலர் கொதித்ததண்ணீரில் ஆவியாக நல்ல பதார்த்தம் போய்விட, இருப்பது கெட்டபதார்த்தங்கள் தானென்கிருர்கள். ஆயினும் பேதிக்குரிய பூச்சிகள் மிகு கொதியினல் இறந்துவிடுமென்பதை எவரும் ஒத்துக்கொள்வார். சிலர் கொதித்த தண்ணீரில்ருசி இல்லை யென்கிருர்கள். பழகிக்கொண்டால் கொதித்த தண்ணீரின் சுவையும் ஒத்துக்கொள்ளும்.

COFFEE AND TEA SUBSTITUTES.

காப்பி, டீ, இவைகளுக்குப் பர்த்திகள்.—காப்பி, தேயிலை பானங்களைச் சாப்பிடுவதினல் உண்டாகும் கெடுதிகளைப்பற்றி அநேகர் அடிக்கடி சொல்லுகிருர்கள். ஆகையால் அவைகளுக்குப் பதிலாக உபயோகிக்கக்கூடிய பதார்த்தங்களைப்பற்றி கொஞ்சம் தெரிந்து கொள்வது நலமாகும். காப்பிக் கொட்டைக்குப் பதிலாக ஊசித்தகர விதையை உபயோகிக்கலாம் என்று ஒருவர் சொல்லுகிருர். அதில் காப்பியின் ஸாராம்சம் இருப்பதோடுகூட தேயிலையின் நல்ல மணமும் இருக்கிறதாம். தவிர, ஊசித்தகரவிதைக்கு மலவிரோசன சக்தியும் ரக்தசுத்தி குணமும் உண்டாம். கோதுமையை வறுத்துப் பொடியாக்கிப் பாலுடனும் சர்க்கரையுடனும் சேர்த்துக்காய்ச்சி சாப்பிடுவது மிகவும் நல்லவழக்கமென்றும், மூளைக்குப் பலமேற்படுகின்றதென்றும், மாணவர்களுக்கும், முதியவர்களுக்கும், மற்றும் நீர் ரோக தேகிகளுக்கும் இது பொருத்தமான ஆகாரமென்றும், டாக்டர் எஸ் பழனியாண்டி தெரிவிக்கிருர். இவர் வைத்தியத்தில் பயிற்சியும் அனுபவமும் பெற்றவர்.

ஆவாரஞ்செடியினுடைய இலை,புஷ்பங்கள் இரண்டையும் உலர்த்திப் பக்குவமாகச் சூரணம் செய்து தினப்படி கஷாயம் போட்டுச் சாப்பிட்டுவருவதால் உஷ்ணந்தணியும். அது நல்ல டானிக்காகவும் ஆகும். நீர் ரோகிகளுக்கு அதிக நீர் இறங்குவதையும், நீரில் அதிகச் சர்க்கரை போவதையும், இந்தக்கஷாயத்தைப் பிரதிதினமும் சாப்பிட்டு வருவதால் தடுக்கலாம். தேக புஷ்டி உண்டாவதுடன் நரம்பு மண்டலங்களையும் பலப்படுத்துங் குணமுடையதால் அதிகமாய்ப் படிக்கும் மாணாக்கர்கள் காப்பிக்குப் பதிலாய் இதையே உபயோகிப்பது வெகு சிலாக்கியம். பாலர்கள், விருத்தர்கள், ரோகிகள் முதலியவர்களுக்கெல்லாம் இது நிர்ப்பயமான தினப்படி உபயோகிக்கக்கூடிய பொருளாகவுமிருக்கிறது. இதை ஷர்பத்தாகவும் பண்ணியுபயோகிப்பது நலம். காபி முதலிய பதார்த்தத்தால் நேரிடக்கூடியதுர்க்குணங்களான நீர்ரோகம் முதலிய வற்றை இது தடுத்து, வேலைசெய்ய உத்ஸாஹ காரியாகவும் இருக்கிறது.

## FUN AND ANECDOTE.
## வேடிக்கையும் துக்கடாக்கதைகளும்.

A CURIOUS TRIAL.

ஒரு தமாஷ் விசாரணை.—சில தினங்களுக்கு முன் கல்கத்தாவில் இரண்டு சிறுவர்கள் சேர்ந்து ஓர்கடையில் சர்க்கரை திருடியதற்காக அவர்களை கடைக்காரன் போலீஸில் அடைத்தான். விசாரணை மாஜிஸ்டிரேட் முன்னிலையில் தொடங்கிற்று. வக்கீலொருவர் குற்றவாளிகளுக்காக ஆஜரானர்.

கோர்ட்டார்—(வக்கீலைப் பார்த்து) நீர்யார்?
வக்கீல்—பையன்களுக்கு வக்கீல்.
கோர்ட்டார்—யாரால் நியமிக்கப்பட்டீர்?
வக்கீல்—பையன்களுடைய தகப்பனல்.
விசாரணை நடந்தது. குற்றந்தானென்ருர் கொஞ்ச நேரத்தில்
கோர்ட்டார்—ஏன் அந்தப் பிள்ளைகளைத் தகப்பன் கண்டிக்கவில்லை.
வக்கீல்—அவன் ஏழை.
கோர்ட்டார்—ஏழையென்றால்——?
வக்கீல்—வேறு பிழைக்கவழி?
கோர்ட்டார்—நான் கேட்பதென்ன? இப்படிப் பேசுகிறீரே.
வக்கீல்—நீங்கள் கேட்பதும் ஸரிதான், நான் சொல்வதும் ஸரிதான். காசிருந்தால் வாசிக்கலாம்.
கோர்ட்டார்—காசில்லாவிட்டால்——?
வக்கீல்—சம்பளமில்லாத படிப்புக்கு இன்னும் கவுன்ஸிலில் யோசனை தீர்மானமாகவில்லை.
கோர்ட்டார்—ஆய்விட்டால்?
வக்கீல்—பையன்கள் பள்ளிக்குப் போகலாம். உபாத்தியாயர் கண்டிப்பார்.
கோர்ட்டார்—அதுவரையும்?
வக்கீல்—கோர்ட்டாரவர்கள் தான்
கோர்ட்டார்—நாம்தானே?
வக்கீல்—எதற்கு?
கோர்ட்டார்—கண்டிக்கத்தானே?
வக்கீல்—ஆம்.
கோர்ட்டார்—ஆனல் செய்வோம்?
வக்கீல்—எப்படி?
கோர்ட்டார்—பிரம்படி?
வக்கீல்—ஐயையோ?
கோர்ட்டார்—ஆமாம், நீர் அவர்கட்டு பிரதி நிதி தானே.
வக்கீல்—கொஞ்சம் தயை செய்யவேணும்.
கோர்ட்டார்—கொஞ்சந்தானே. 10, 14 போதுமா?
வக்கீல்—ஒருவனுக்கு 10, மற்றவனுக்கு 14—அடி பிரம்படி

பயல்களுக்குப் பிரம்பும் கரும்புபோலத் தானே.

DOCTORS DISAGREE.

வைத்தியர்கள் அபிப்பிராய பேதப்பட்டார்கள்.—ஒரு ஜமீன்தார் வயிற்றுவலியினல் ரொம்ப பாதைப்பட்டுக் கொண்டிருக்கையில், இரண்டு பெரிய டாக்டர்கள் வைத்தியம் செய்துகொண்டிருந்தும், கொஞ்சமாவது அநுகூலமாகாமல் படுக்கையில் படுத்த அன்றுதொட்டு துர்பலமாய்க் கொண்டே வந்தார். அவ்வாறிருக்க அந்த டாக்டர்கள் வியாதியின் காரணத்தைக் குறித்து அபிப்பிராய பேதங்கொண்டு, வயிற்றுக்குள் ரணமிருக்கிறதென்று ஒருவரும், இல்லையென்றும் மற்ருெருவரும், சொல்லி சண்டைபோடத் தொடங்கினர்கள். ......"ஆகட்டும், அவர் இறந்தபிறகு அறுத்துப் பார்த்தபோதாவது உண்மை வெளிப்படாதா?" என்று அவர்களில் ஒருவர் கடைசியில் ஸமாதானமாய்ச் சொன்னர். அதைக் கேட்டபிறகு அந்த ரோகிக்குண்டான தைரியத்தைச் சொல்லவே வேண்டியதில்லை.

A MISER.

ஒரு லோபி.—பரமலோபியான ஒரு உத்யோகஸ்தன் எப்பொழுது பார்த்தாலும் பழைய வேஷ்டியையும் கிழிந்த சொக்காயையும் தரித்துககொண்டு காலந்தள்ளினன். "ஓய்! உமக்கு இவ்வளவு தனமிருந்தும் இப்படிப்பட்ட பாழும் துணிகளை ஏன் உடுத்துகிறீர்?" என்று ஒரு சிநேகிதன் கேட்டான். என்னை இந்த ஊரில் எல்லாரும் அறிவார்கள். நான் எந்த வேஷ்டி கட்டினல் என்ன? என்று அந்த லோபி மறுமொழி சொன்னன். சில நாள் கழித்து அதே சிநேகிதன் அதே உத்தியோகஸ்தனை வேருெரு ஊரில் ஸந்தித்தபொழுது "இது உம்மூர் இல்லையல்லவா! இங்கேயாவது நீர் நல்ல வஸ்திரங்களை உடுத்தக்கூடாதா?" என்று கேட்க, "இங்கே என்னை யாரறிவார்கள்? நான் எந்தத் துணி உடுத்தினலென்ன?" என்று அந்த லோபி சொன்னன்.

## CURIOSITIES.

## விநோதங்கள்.

FISH SKIN APPAREL.

**மீன்தோலுடை.**—கீழ் ஸைபீரியாவில் ஆமூர் நதியோரத்தில் குடியிருக்கும் பொன்நூல மென்னும் சாதியாரது ஸ்திரீகள் மீன்தோலினாலான விசித்திர உடையணிந்துகொள்ளுகிறார்களென்று சொல்லப்படுகிறது.

240 RS FOR A DINNER.

**ஒரு வேளை சாப்பாட்டுக்கு ரூபா 240.**—அமெரிக்காவில் ஒருவன் தன் சிநேகிதர்களுக்கொரு விருந்து செய்வித்தான். விருந்துசாப்பிட்ட நபர் ஒன்றுக்கு 240ரூபாய் வீதம் ஒட்டல் காரனுக்கு கொடுத்தானாம்.

TWO OLD JEWS.

**இரண்டு கிழ ஜ்யூக்கள்.**—ஒரு ஜ்யூ 113 வருஷமும் மற்றொரு ஜ்யூ 145 வருஷமும் ஜீவித்திருந்ததாக ஜூயிஷ் க்ரானிக்கிள் பத்திரிகை எழுதுகிறது. இரண்டாவது ஜ்யூவுக்கிருந்த பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், கொள்ளுப் பேரப்பிள்ளைகள் முதலியவர்கள் 145 பேர்களாம்.

TO DESERVE A WIFE.

**பெண்சாதி வேணுமானால்.**—கிரேக்கர் வசிக்கும் ரோட்ஸ் என்னும் தீவில் விவாகஞ் செய்துகொள்ள விரும்புகிறவன் பெண் கொடுப்பவர்க்கு கடலில் முழுகி அவர்கள் குறிப்பிட்டுள்ள மீனைப் பிடித்துக் கொடுத்தால்தான், அவர்கள் அவனுக்குப் பெண் கொடுப்பார்களாம். நம்முடைய தேசத்திலும் ஏறு (எருது) தழுவிப்பிடித்தவனுக்குப் பெண்ணைக் கொடுப்பது வழக்கம் முற்காலத்திலிருந்தது.

A DAILY PAPER FOR A PICE.

**காலணா தினஸரிப் பத்திரிகை.**—ருஷியாவைச் சேர்ந்த மாஸ்கோ பட்டணத்தில், ஒரு தினஸரிப் பத்திரிகை ஆரம்பித்திருக்கிறார்கள். அதன் பெயர் "பார்த்திங் கெஜட்". அதற்குச் சந்தா ஒரு பார்த்திங் அதாவது நமது கணக்குப்படி காலணா. இதுவே உலகத்திலுள்ள தினஸரிப் பத்திரிகைகளில் மிகக் குறைந்த சந்தாவுடையதாம். அதன் சந்தாதார்கள் லக்ஷக் கணக்காய் அதிகரிக்கிறார்களாம்.

AN OLD COUPLE.

**கிழத்தம்பதிகள்.**—பின்ச்யெங் என்ற ஊரில் ஜேம்ஸ் காதார்ன் என்ற 76 வயதுடைய கிழவனுக்கும் ஸாரா என்ற 75 வயதுடைய கிழவிக்கும் இப்போது கலியாணம் நடந்திருக்கிறது. கிழவன் பூட்டனையும் பெற்றுவிட்டவன். கிழவி பேரன் பேர்த்திகளை எடுத்தவள். இருவருக்கும் முதுவயது உபகாரச் சம்பளம் கிடைக்கின்றது.

CRAB FAMINE.

**நத்தைப் பஞ்சம்.**—பிரான்சுதேசத்தில் ஜனங்கள் நத்தையை உணவுப் பொருளாகப் பெரிதும் உபயோகிக்கின்றார்கள். இந்த வருஷத்தில் கோடைகாலம் வெகு கொடுமையாயிருந்தமையால், கோடிக்கணக்கான நத்தைகள் கூட்டிலேயே மடிந்து விட்டன. ஆகவே அவைகளின் விலை அதிகப்பட்டுவிட்டது. இதனால் நத்தைப்பஞ்சம் பரவிட்டதென்று அத்தேசத்தார் வருந்துகிறார்களாம்.

ABDUCTION OF MEN IN BURMA.

**பர்மாவில் ஆள்திருட்டு.**—பர்மாவில் சிலவிடங்களில் தனியாகப் பிரயாணஞ் செய்பவர்களைத் திருடர்கள் பிடித்துக்கொண்டுபோய்க் காட்டில் மறைத்துக்கொண்டு அவர்களுடைய சொந்தக்காரருக்கு இன்ன இடத்தில் தனியாகவந்து இத்தனை ரூபாயை வைத்துவிட்டு ரூபா கொண்டுவந்து வைத்திருக்கிறேனென்று உரக்கக் கூவிவிட்டுத் திரும்பிப்பார்க்காமல் போய்விட்டால் ஆளைவிட்டுவிடுவோம், இல்லையானால் இத்தனை நாளுக்குமேல் உன்னுடைய சொந்தக்காரனைக் கொன்றுவிடுவோமென நோட்டீஸ் எழுதிக்கொண்டுவந்து ஒட்டிபணஞ் சம்பாதித்துவருகிறார்கள். இவ்விதம் பணம் கொடுக்கத்தவறிய இருவரை ஸமீபத்தில் தக்கியென்ற ஊருக்கு ஸமீபத்தில் கொலைசெய்து அவர்களுடைய தலையை சொந்தக்காரன் வீட்டு வாயிலில் கொண்டுவந்து போட்டதாகத் தெரியவருகிறது.

2 GALLONS OF TEARS.

**அழுதகண்ணீர் 2 காலனளவு.**—போர்ட்லாண்டு என்ற இடத்தில் ஒரு நாடகம் நடந்ததாம். அதைப் பார்க்கும்போது ஜனங்களெல்லாம் கண்ணீர்பெருக அழுதார்களாம். மொத்தத்தில் சொரிந்த கண்ணீர் 2048 தேயிலைக் கரண்டியளவிருக்கிறதென்று அதாவது 2 காலனென்று கணக் கெடுத்திருக்கிறார்கள். கதை எப்படி உருக்கமாயிருந்ததோ?

## HINTS AND RECIPES.

## யுக்திகளும் முறைகளும்.

RAW AND BOILED EGGS.

**பச்சையும் வேந்ததுமான கோழிமுட்டை.**—இவை இரண்டும்பார்வையில் வித்தியாசம் தோன்ரு. உடைக்காமல் இது வெந்தது இது வேகாதது என்று அடியிற்கண்ட முறையால் கண்டுபிடித்தல் கூடும். வெந்ததைச் சுழற்றினால் சுழலும், சுழலும் போது தொட்டால் சுழலடங்கி நின்றுவிடும். உள்ளே உள்ள மஞ்சள், வெள்ளைக் கருக்கள் ஒரேகட்டியாகி விடுகின்றன. முட்டை முழுமையும் ஒருங்கே சுழலும். வேகாததைச் சுழற்றினால், சுழலும். தொட்டால் சுழல் அடங்காமல், அது தொடர்ந்து இன்னும் சுழலும். இதற்குக் காரணம். வெளிச்சுழற்சியானது, தொட்டமாத்திரத்தில், மேல் ஓட்டைப் பற்றியதினால், அவ்வோடு ஸம்பந்தமட்டில் நிற்கும். ஆனால், உள்ளே இருக்கிற கருக்கள் ஜலத்தன்மையனவாக இருக்கிறதால், அவைகளுடைய சுழற்சி நிற்காமல் நிகழ்கின்றது. அச்சுழற்சி, வெளி ஓட்டுடன் ஸம்பந்திக்கிறமையால், தொட்டாலும், பச்சை முட்டை சுழன்றுகொண்டே இருந்துதானைப் பின்பு சக்திகுன்ற நிற்கும். தட்டாமாலை ஆடினவனைப் பிடித்துவிட்டால் முன் சுழற்சியின் வேகத்தால் மறுபடியும் கொஞ்சநேரம் சுழலுவான். அதுபோலும் என்று அறிக.

TO PRESERVE COCOANUT OIL.

**தேங்காயெண்ணெய் கெடாமலிருக்க**—தேங்காயெண்ணெயை ஆட்டிவைத்தபிறகு கொஞ்சநாட்களுக்கெல்லாம், அதில் ஒருவகையான காரல் வாஸனைவந்துவிடுகிறது. அம்மாதிரி காரல் வாஸனை வாராமலிருப்பதற்கு அவசியமாய் வேண்டுவதென்னவென்றால் ஆட்டிக்கொணர்ந்த எண்ணெயில் சிறிது கொய்யாக் கொழுந்தைப்போட்டு விடுவதேயாம். காயும்போது கொய்யாவின் ரஸம் எண்ணெயில் இறங்கிவிடும். அடுப்பிலிருந்து கீழிறக்கி சூடு தணிந்தபிறகு எண்ணெயிலிருந்து கொய்யா இலையையெடுத்துவிடவேண்டும். இம்மாதிரி பரீக்ஷார்த்தமாய்ச் செய்து பார்த்ததில் மனதுக்குத் திருப்திகரமாகவே யிருந்ததாம். எண்ணெயை தோய்ந்த பிறகு பார்த்தால் வெண்ணெ யுருக்கின புத்துருக்கு நெய்போன்ற மணத்துடனிருக்குமாம்.

CARE OF THE WATCH.

**கெடியாரப் பாதுகாப்பு.**—1. 24-மணிக்கொரு முறை அதாவது ஒரு நாளைக்கொருமுறை குறித்த நேரத்திலேயே அதிக பரபரப்பில்லாமல் நிதானமாய் சாவிகொடுக்கவேண்டும்.

2. தூசி அதிகமாகப் படிந்த இடத்திலாகிலும் அழுக்கடைந்த சட்டை ஜோப்பியிலாகிலும் கெடியாரத்தை வைக்கக்கூடாது.

3. மணிபார்க்கும் வேளைதவிர மற்றவேளைகளில் கடியாரத்தை சட்டை ஜோப்பியிலிருந்து எடுக்கக்கூடாது.

4. குளிர், காற்று, பனி, மழை முதலிய காலங்களில் ஈரந்தாங்கும்படி வைக்கக்கூடாது.

5. பிராண சிநேகிதனாயிருந்தாலும் இரவல் கொடுக்கக்கூடாது.

6. அடிக்கடி பின்பக்கம் திறந்து பார்க்கக்கூடாது. அவ்விதம் பார்ப்பதனால் காற்றிலிருக்கும் ஈரம் தூசி முதலியவைகள் உள்ளே சக்கரங்களிலும் எஃகு கூர்களிலும் படிந்து கெடியாரத்தை ஓடாமல் செய்யும்.

7. 24-மணிக் கொருமுறை சாவி கொடுக்க வேண்டுமேயொழிய ஒரு நாளைக்கு 2, 3, முறை சாவி கொடுக்கக்கூடாது.

8. தலைசாவியுள்ள கெடியாரங்களுக்கு இடப்பக்கமாயும், உள்சாவியுள்ள கெடியாரங்களுக்கு வலப்பக்கமாயும் சாவியைத் திருப்பவேண்டும்.

9. கெடியாரம் குறைவாகவாவது அதிகமாகவாவது ஓடும்போது காலத்தை குறைக்கவேண்டுமானால் ரெகுலேடரை S என்று போட்டிருக்கும் பக்கம் மெதுவாக அரைக்கீற்றிற்குத் தள்ள வேண்டும். காலத்தை அதிகப்படுத்த வேண்டுமானால் F என்ற எழுத்துப் பக்கம் மெதுவாக தள்ளவேண்டும்.

10. எப்போதும் உறை, அல்லது சிறுபெட்டியில் வைத்திருக்கவேண்டும்.

## ECONOMIC LITERATURE.
## பொருளாதார ஸம்பந்தமான பிரசுரங்கள்.

TRADE JOURNALS.

**தொழில் ஸம்பந்தமான பத்திரிகைகள்.**—இவைகளைப்பற்றி, ஒரு பம்பாய்ப் பத்திரிகை எழுதுகிறதாவது, "இந்தியச் சிறுவர்கள் அவர்களுடைய தொழில்கள் ஸம்பந்தமாய் உலகத்தில் அங்கங்கே என்ன நடக்கிறதென்றும், தொழில்களை எப்படித் திறமையாய்ச் செய்யலாமென்றும் அறிந்துகொள்ளக் கூடிய பிரசுரங்களை வாங்கிப் படிப்பதில்லையென்று குற்றம் சாட்டுவது வழக்கம். இப்படிக்குற்றம் சாட்டுவது நியாயமே. தொழில் ஸம்பந்தமான பத்திரிகைகளை வாசித்து வந்தால், ஒரு வருஷத்து சந்தாவிற்குமேலாகவே அநேகம் ஸமயங்களில் அதில் பிரசுரமாகியிருக்கும் ஒரு குறிப்பிலிருந்தே எடுத்து விடலாம். ஒரு புதிய ஆயுதம், அல்லது, ஒரு புதியமுறை, ஒரு புதியசரக்கு அல்லது ஒரு புதிதாய்ச் செய்த ஸாமான், இவைகளை பத்திரிகையில் வாசித்து அறிந்துகொண்டு நல்ல லாபம் ஸம்பாதித்து விடலாம். இதேமாதிரியாக வீணைப் பாழாய்ப் போகும் ஒரு ஸாமானை உபயோகிப்பதற்கான யுக்தியை யறிந்துகொண்டு ஆயிரக்கணக்கான ரூபாயை ஸம்பாதித்துவிடலாம். கண்டவைகளைப் படிப்பதைவிட மேற்சொன்னபடி தொழில் பத்திரிகைகளை கிரமமாகப் படித்துவருவது நல்ல பயன் கொடுக்கும்."

பிழைக்கும்வழிப் பத்திரிகையில் வெளியாகும்விஷயங்களைப் படித்து அதில் உள்ள அம்சங்கள்பயன்தரத் தக்கவையா அல்லாவா என்று பார்க்கவேண்டும். உதாரணமாக, இந்தப் பத்திரிகையில் ஒற்றை அலகு விஷயமாய் எழுதியுள்ள வியாஸங்களைப் படித்து அவைகளில் சொல்லியபடி நில ஸ்வான்கள் நடத்தியிருப்பார்களானால் அதனால் வேறுலாபம் கிடைத்திராமல் போனாலும் விதை லாபம் கிடைத்திருக்கும். அதுவே பிழைக்கும்வழியின் சந்தாவுக்கு மேலிருக்கும்.

THE AGRICULTURIST.

**கிருஷிகன்.**—இது விவஸாய விஷயமாக பிரசுரமாகும் ஒரு சிறந்த மாஸாந்திரப் பத்திரிகை. இதன் தை மீ ஸஞ்சிகையில் "விதை பொறுக்குவதில் கவனிக்கவேண்டிய அம்ஸங்களில் கனம் ஒன்று," "வேலமரம்," "நஞ்சைகளில் கிணறுகள்" என்னும் வியாஸங்கள் அடங்கியிருக்கின்றன.

## TAMIL LITERATURE.
## தமிழ்க் கல்வி.

THE QUEEN OF CHASTITY.

**மாங்கல்யப் பிச்சை அல்லது கற்புக்கரசி.**—இது ரங்கூன் "சுதேச பரிபாலினி" பத்திராதிபர் புரசை ஏகாம்பர முதலியாரால் இயற்றப்பட்டது.

இந்த மாங்கல்யப் பிச்சை அல்லது கற்புக்கரசி என்ற சரித்திரமானது "நமது தமிழ் பாஷையின் அபிவிர்த்தியை உத்தேசித்தும் படிப்பவர்களுக்கு எதார்த்த நம்பிக்கை, மனோதிடம், மனுபிமானம் பாது காப்பு, களங்கமற்ற தேசாபிமானம், நல்ல நடத்தை, அரசாங்க நீதி, குடிகளின் பாத்தியதை முதலிய நமது தமிழர்களுக்கு தற்காலத்தில் அவசியம் வேண்டிய அநேக நல்ல விஷயங்களை தெளிவாக போதிக்கும் படியாக" எழுதப்பட்டிருக்கிறது, விலை அணு 12.

THAYAMMAL'S BIOGRAPHY.

**தாயம்மையார் சரித்திரம்.**—இது வில்லிப்புத்தூர் வி. எம். எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் முன்னீர்ப் பள்ளம் மக-ா-ா-ஸ்ரீ பொ. ஈசுரமூர்த்தியா பிள்ளையவர்களால் இயற்றப்பெற்றது. திருநெல்வேலி தாயம்மையம்மாள் பெண் கல்விச்சாலை, காரியதரிசி மக-ா-ா-ஸ்ரீ டி. ர. நல்லபெருமாள் பிள்ளை யவர்களால் பிரசுரிக்கப்பெற்றது.

GNANA KANTHI.

**ஞானகாந்தி.**—இது மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர்களில் ஒருவராகிய செங்கை—ராஜு செட்டியார், எம். பி. பி. ஐ. அவர்களால் இயற்றப்பட்டது. இந்த நாவலில் ஆசிரியர் இரண்டு வித ஸ்திரீகளைப்பற்றி எழுதுகிறார். நம்முடைய தேசத்துப் பெண்களைப்போல் வணக்கம், ஒடுக்கம், புருஷனிடத்திலும் அவரைச் சேர்ந்த பந்துக்களிடத்திலும் மரியாதை, தெய்வபக்தி, பதிவிரதா தர்மம் ஆகிய சிறந்த குணங்கள் உள்ளவள் ஞானகாந்தி. இவளுக்கு எதிர் நடையானவள் அம்புஜாட்சி. இவளுடைய தகப்பன் இவளுக்கு செல்லங்கொடுத்து வளர்த்துப்பாழாக்கி, அதனால் அவள் புருஷன் பெற்றூர், இன்னும் ஜாதியார்எல்லாரையும் விட்டு விலகி, மானத்தை இழந்துகடைசியாக துக்கப்படுகிருள்.

ஓம்

# திருமண வாழ்த்து.

## தெய்வவணக்கம்.

எங்கும் எம் உளத்தும் தங்கும் இறைவனைப்
பொங்கும் உள் அன்புடன் போற்றுவம்யாமே!

---

(பொதுவியல்; மணமக்களை ஆசீர்வதித்தல்)

வாழ்த்துகிறோம் வாழ்த்துகிறோம் மாப்பிள்ளையும் பெண்ணையும் நாம்
வாழ்த்துகிறோம் "பல்லாண்டுகள் மங்களமாய் வாழ்க" என்றே
பூவும் மணமும் போல்—பொருந்தியே வாழ்ந்திருப்பீர்
பாவும் பொருளும்போல் பண்புடையராய் வாழ்வீர்!
பழஞ்சேர் சுவை போற்-பழகி நன்றாய் வாழ்ந்திருப்பீர்!
கிழம் பெரியரானபின்னும்—கேண்மைகுன்றாமல் வாழ்வீர்!
அன்றிலும் பேடும்போல-அன்பொழுக வாழ்ந்திருப்பீர்!
என்றும் பிரியீர்-இனப்பொழுதும் தாமறவீர்!
உத்திரமும் நற்றூணும்—ஒன்றிற்கொன்றாதரவாய்ப்
பத்திரமாய் நிற்பதுபோல் பாங்குடையாராய் வாழ்வீர்.

(தலைவனியல்; மணமகள் முன்னிலையாகக்கூறுதல்)

பெண்மணியே! கைப்பிடித்த—பேரழகர் தன்குணத்தைக்
கண்மணியே! சொல்லுகிறேன் காதலுடன் கேட்பாய் நீ!
பூவுலகெல்லாம் புகழும் புண்ணியவான் தன்பெயரை
நாவில் உரைக்க நனி இனிக்கும் கண்மணியே!
சீர் பொருந்தும் நம்மகிமைச் செல்வர்குணம் செப்பிடுங்கால்
நார் பொருந்தும் பூமணம்போல் நாமுயர்வோம் நங்காய்கேள்.
ஆனாலும் நேரமில்லை அத்துணையும் சொல்வதற்கு
தேனிலும் சிறுகஉண்பவர்க்கே தீஞ்சுவையாம்.

———(o)———

உன் கணவர் நம்பதியை உள்ளபடி ஓர்ந்தவர் காண்
நின்கணவர் எந்நாளும் நீங்காத பக்ஷம்வைப்பார்,
தலைவர் இவர் தன்கடமை தக்கபடி ஓர்ந்தவர்காண்,
தலைவியும் தானும் சரிசமனும் என்றுணர்வார்,
பலவிதத்திலும் மனைவி பர்த்தாவோடொப்பெனினும்,
சில விதத்தில் மேல் எனவே சிந்திப்பார் உன்கணவர்,
ஆதரவாய்ப் பெண்மணியை அன்பமருங்கண்ணெனவே,
காதலுடன் காத்தல் கணவர்கடன் என்றறிவார்,
என்றறிவதால் இந்த ஏற்றமுள்ள பெண்பிறப்பின்,
நன்றறிவார் தம்முடைய நல்லுயிர் போல் போற்றிடுவார்,
பசுவை வணங்குமிந்தப் பாரதநாட்டார் குறிப்பை
விசுவசிப் போர்க்கெல்லாம் விளங்குமிதன் உட்பொருளே!
காதலிமேல் காதலுற்ற காதலர் கண்ணுள்ளொளிபோல்,
பேதமறக்கலந்து பேரின்பங் கொள்வார்காண்,

---

நாட்டுக்கெல்லாம் அரசாய் நன்மைபலபெற்றாலும்
வீட்டுக்கரசியுடன் விளையாடி வாழ்ந்திருப்பார்.
கோபியார் வீணாய்க் கொடுமொழிகள் தாம்பகரார்
பாரியாள் சற்றும் பசித்திருக்கச் சம்மதியார்
சிறுமையாற் சங்கடத்தால் சின முட்டினாலுமவர்
பொறுமையால் எல்லாம் பொறுக்கவல்ல புண்ணியர் காண்
வீட்டு வேலைமிகுந்தும் வேலையர் இல்லாதிருந்தால்
கூட்டுவார் மூட்டுவார் கூடவிருந்தாதரிப்பார்,
மகப்பெறுதலாம் பெருமை மாதருக்கேயானாலும்
மிகப்பண் புறவளர்த்தல் வித்தகர் கைக்கொள்வாரே!
பொறுமையே பூணாகப்பூண்டவரிப் புண்ணியர்காண்
வறுமையிலும் வாழ்வுகுன்றா வள்ளலிவர்கண்மணியே!
தாறுமாறாய்வைத தன்மனைவி பேச்சையெல்லாம்,
சீறும் இடிமின்னல் என்றே சிந்தைநோவாதிருக்க
மேலுமவள் தண்ணீரை மேடைமேல் நின்றூற்ற
சாலுமந்த மின்னிடிக்குத் தக்க மழை என்றுரைத்த
சான்றவரிற் சான்றவராம் சாக்கிரதாஸ் (Socrates) என்பவரைப்
போன்றவர் என்றாலும் பொருந்தும் இந்தப்புண்ணியர்க்கே
இன்னும் பலவாம் இவர்க்குள்ள நன்குள்ள நற்குணங்கள்.
சொன்னால் விரியும் சுருக்கினேன் கண்மணியே!

## MISCELLANEOUS NEWS.

### நாநா ஸங்கதி

---

**TAMILS IN CEYLON.**

**ஸிலோனில் தமிழர்கள்.**—சிலோன் தீவில் வாழும் தமிழர்கள் 10,59,354 எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். போனவருஷத்துக்குள் தமிழர் ஜனத்தொகை நூற்றுக்கு பதினொன்றாக அதிகமாயிற்று. ஸிலோனில் மொத்த ஜனத்தொகை 41,05,535. இதில் பௌத்தர்கள் 24,79,110; ஹிந்துக்கள் 9,32,696; மகமதியர் 283,582; கிறிஸ்தவர்கள் 4,08,984; மற்றவர் மற்ற மதத்தினர். இராணுவத்தையும் கப்பல் தொழிலையும் சேர்ந்த ஐரோப்பியரை விலக்கி இப்போது ஸிலோனில் வஸிக்கும் ஐரோப்பியர் 7,625; இவர்கள் முக்கியமாய் ரப்பர் காப்பி, டீ, போன்ற தோட்டப் பயிர் செய்கிறவர்கள்.

**SALUTES.**

**மரியாதைக் குண்டுகள்.**—மரியாதைக்குண்டுகள் என்று அரசர்களின் வரவின்போது வெடி தீர்ப்பது வழக்கம். அது ஒரு ராஜ கௌரவமாகப் பாராட்டப்படுவது. தற்போதுள்ள மரியாதைக் குண்டுகள் பின்வருவன.

| | | |
|---|---|---|
| இந்தியா சக்ரவர்த்தி அவர்கட்கு | | 101 |
| இந்தியா கவர்னர் ஜெனரல் | ,, | 31 |
| ப்ரஸிடென்ஸி கவர்னர் | ,, | 17 |
| பரோடா ராஜா | ,, | 21 |
| ஹைதிராபாத் நிஜாம் | ,, | 21 |
| மைசூர் மகாராஜா | ,, | 21 |
| திருவாங்கூர் மகாராஜா | ,, | 19 |
| குவாலியர் மகாராஜா | ,, | 19 |
| இந்தூர் மகாராஜா | ,, | 19 |
| புதுச்சேரி கவர்னர் | ,, | 17 |
| போர்ச்சுகீஸ் கவர்னர் ஜெனரல் | | 17 |
| கொச்சி ராஜா | ,, | 17 |
| ஆர்க்காட் நவாபு | ,, | 15 |
| லெப்டினெண்டு கவர்னர் | ,, | 15 |
| புதுக்கோட்டை மகாராஜா | ,, | 11 |

**WHO IS A HINDU?**

**ஹிந்து என்பவர் யார்?**—அலகாபாத்தில் பிரசுரமாகும் இந்தியப் பத்திரிகையாகிய "லீடரின்" வேண்டுகோளின்பேரில் ஆனரபில் வி. கிருஷ்ணஸாமி அய்யர் ஹிந்து மதத்துக்கு அவசியமான அம்சங்கள் இன்னவென்று சொல்லி, அப்பத்திரிகைக்கு ஒரு நிரூபம் எழுதியிருக்கிறார். எவன் கருமங்களால் ஜன்மம் உண்டாகிறதென்றும், ஞானத்தால் முக்தியென்றும், வேதங்கள் ஸத்தியமென்றும், மனுஷருடைய வாழ்க்கையை நடத்தும் தெய்வங்கள் உண்டென்றும், நம்புகிறானோ அவன் ஹிந்து. பிரிடிஷ் நியாய ஸ்தலங்கள் யாருக்கு ஹிந்து லாப் பிரகாரம் நீதி செலுத்துகின்றனவோ அவன் ஹிந்து. ஜெயினர்கள், பிரம்மோக்கள், சீக்கியர்கள், ஆரியர்கள், இவர்களும் ஹிந்துக்கள். இந்தியாவில் வசிக்கிறவனாயிருந்து கிறிஸ்து மதம் மகமதியமதம் பார்ஸி மதம் பௌத்தமதம் இவைகளில் எதையும் சேராதவன் ஹிந்து. வெகு நூற்றாண்டுகளுக்கு முன்னால் இந்தியாதேசத்தில் குடியேறி ஹிந்து ஸமூகத்தில் அடங்கிப்போன தார்த்தரிகள் ஹூணர்கள் இவர்களுடைய வம்சத்தார்களும் ஹிந்துக்கள். நாஸ்திகனாயிருந்தாலும் அவன் ஹிந்துவல்லவென்று சொல்ல முடியாது. இந்தியாவில் பல தலைமுறைகளாக வசித்து அன்னிய மதம் எதிலும் சேராதவன் ஹிந்து. ஹிந்து என்கிற பதம் இந்தியாவில் உண்டானதல்ல. இந்திய ஆரியர்களால் அது ஒப்புக்கொள்ளப்பட்டதுமில்லை. ஹிந்து என்பதும் ஹிந்து மதமென்பதும் ஜனங்களுடைய சரித்திரத்தில் அப்போதப்போது அர்த்தத்தில் வேறுபட்டிருக்கின்றன. இவைகள் நியாஸ்தலங்களால் உபயோகிக்கப்படும் பதங்கள்.

**PROPORTION OF MALES TO FEMALES.**

**ஆண் பெண் விகிதங்கள்.**—1881-ம் வருஷத்து ஸென்ஸஸ் முதல் ஜனத்தொகையில் பெண்களின் விகிதம் அதிகமாகவும் ஆண்களின் விகிதம் குறைச்சலாகவுமிருந்துகொண்டுவந்தது. இப்போது 1881-ம் வருஷத்துக்கு முந்தியிருந்த விகிதங்கள் திரும்பி விட்டதாய்ச் சொல்லப்படுகிறது. அதாவது, 1000 ஆண்களுக்கு 954 பெண்கள் இருக்கிறார்கள். இதற்குப் பஞ்சாப்பிலும் ஐக்கிய மாகாணங்களிலும்

நடமாடி வரும் ப்ளேக் நோய்க்குப் பெண்பிள்ளைகளே அதிகமாய் இரையாய்ப் போய்விட்டது காரணமெனப்படுகிறது. இந்நாட்டிலே ஐரோப்பா கண்டத்தில் நடைபெறுவது போலவே ஆண்களாய்ப் பிறக்கும் குழந்தைகள் பெண்களாய்ப் பிறக்கும் குழந்தைகளைவிட அதிகந் தானும். ஆனால் ஐரோப்பாவில் ஆண்களுக்கு மரண ஹேதுக்கள் அதிகமாய் ஏற்படுவது பற்றி பெண்களின் ஜனத்தொகை அதிகமாய் விடுகிறதாம். இந்நாட்டில் அப்படியில்லையாம். பெண்களுக்கே மரண ஹேதுக்கள் ஜாஸ்தியாயிருக்கின்றனவாம். பலவித நோய்களாலும், பிரசவகால அபாயங்களாலும், பாலவிவாகங்களாலும், கடுமையான வேலைகளாலும், பெண் குழந்தைகளைக் கருத்தாய்ப் பேணாமையாலும், பெண்களுக்குள் மரணங்கள் அதிகமாயிருக்கின்றனவாம். உண்மையிப்படி இருக்க சிலர் ஸென்ஸஸ் எடுக்கும் காலத்தில் மாதர்களின் பேர்கள் கணக்குக்கு வருவதில்லையாகையால், மாதர்களின் ஜனத்தொகை குறைச்சலாய்க் காண்கிறதென்று அபிப்பிராயப்படுகிறார்கள். அந்த அபிப்பிராயஞ் சரியல்லவென்றும் ஸென்ஸஸ் விட்டுப் போகாமல் எடுக்கப்படுவதற்கும் மாதர்களின் ஜனத்தொகை விகிதத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை பென்றும், இப்போது முடிவுசெய்யப்பட்டிருக்கிறது.

THE TANJORE DISTRICT CONFERENCE.

**தஞ்சை ஜில்லா கான்பரென்ஸ்.**—ஸமீபத்தில் மன்னார்குடியில் கூடிய கான்பரென்ஸில் முதலிரண்டு தீர்மானங்களும் சக்கிரவர்த்தியைப்பற்றியும் புதுக் கவர்னர் ஸர் கிப்ஸன் கார்மிகேலைப்பற்றியும் அவர்கள் வரவில் சந்தோஷத்தைத் தெரிவித்து விட்டு, மூன்றாவது தீர்மானம் அஸெஸ்மென்டுகள் 60 வருஷத்துக்கொருதடவை புதுப்பிக்கப்படவேண்டுமென்றும், அப்போது அதை அதிகப்படுத்த வேண்டுமானால் சட்டசபையின் அனுமதி வேண்டுமென்றும், டிமார்கேஷன் கல்லுகள் நடுவதைப்பற்றின ஒழுங்குகள் மிராசுதார்களுக்குத் தொந்தரவைக் கொடுப்பதால் அவைகளை மாற்ற வேண்டுமென்றும், வில்லேஜ் எல்லைகளுக்கு அப்புறம் கால்வாய்களில் வண்டலை எடுப்பது கவர்ன்மெண்டின் காரியமென்றும், புறம்போக்கு நிலங்கள் மாடு மேயவும் சுகாதாரம் பச்சை எரு முதலியவைகளுக்கும் விடப்பட வேண்டுமென்றும், மெட்ராஸ் லாண்ட் என்க்ரோச்மெண்ட் ஆக்டுக்கு 12 வருஷத்துக்கு முன்னால் செய்யப்பட்ட என்க்ரோச்மெண்டுகள் அப்படியே இருக்கவேண்டுமென்றும், வாயிதாவை ஒத்திவைப்பதற்காக பெடிஷன்கள் செய்ய வேண்டியது அவசியமில்லாமலிருக்கவேண்டுமென்றும், விவசாயிகள் ஏப்ரில் மாதம் 30-ந் தேதிக்குள்ளாக பாசன வேலைகளைச் செப்பனிடாமல் இருப்பார்களானால் ரெவினியூ உத்தியோகஸ்தர்கள் குடி மராமத்து ஆக்டுப்படி நடத்தவேண்டுமென்றும், அதில் அவசியமான திருத்தங்கள் செய்ய வேண்டுமென்றும், தீர்மானிக்கப்பட்டது.

அடுத்த தீர்மானம், அன்னிய தேசங்களுக்கு எமிகிரேஷன் ஆக்டுப்படி போகிறவர்கள் அப்படிப் போகுங்காலத்தில் அவர்கள் வேலை செய்வதாக் கண்டிராக்ட் ஒன்றுமில்லை யென்று வில்லேஜ் மாஜிஸ்டிரேட்டிடம் ஸர்ட்பிகேட் பெற்று அதை ப்ரொடெக்டர் அல்லது ரெஜிஸ்டரிங் ஆபீசர்முன் தாக்கல் செய்ய கவர்ன்மெண்ட் ஒழுங்கு செய்ய வேண்டுமென்று செய்யப்பட்டது. பிறகு, சென்னைசட்ட சபைக்கு தஞ்சாவூர் ஜில்லாவின் முக்கியத்தை உத்தேசித்து முனிசிபாலிட்டிகளும் டிஸ்ரிக்ட் போர்டுகளும் தனியான மெம்பரை எலெக்ட் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

TIT-BITS OF ANIMAL LIFE.

**ஐந்து வர்த்தமான ஸாரம்.**—1824-ம் வருஷத்தில் இங்கிலாந்து தேசத்து லண்டன் நகரத்தில் ஜீவ ஹிம்ஸ நிவாரண ராஜ சங்கமொன்று ஸ்தாபிக்கப்பட்டு வாயில்லாஜந்துக்களுக்கு அதிக உபகாரமாயிருந்துவருகிறது. அச்சங்கத்துக்கு மஹா மஹிமையுள்ளநம் சக்ரவர்த்தியவர்களும்சக்ரவர்த்தினியாரும் பரிபாலர்களாக இருப்பதன்றி, அவர்களின் ஜேஷ்டபுதல்வரான மஹிமையுள்ள ப்ரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரபு அவர்கள் அக்ராசனாதிபதியா யிருக்கிறார். அச்சங்கத்து நிபந்தனைகளை யனுசரித்து, அனேக தேசங்களில் அப்படிப்பட்ட சங்கங்கள் ஏற்பட்டு, சென்னப்பட்டணத்திலும் 1877-ம் வருஷத்தில் இந்த ஜீவ ஹிம்ஸ நிவாரண சங்க மேற்பட்டது.

1900-ம் ஆண்டு வரையில் இச்சங்கத்துக்குச் சம்பந்தமான காரியமெல்லாம் வாயில்லா ஜந்துக்களை ஹிம்சிப்பவர்களை சிக்ஷைக்குட்படுத்துவது மாத்திரமே என்று எல்லோரும் நினைத்திருந்தார்கள். அவ்வருஷ முடிவில், இச்சங்கத்துக் காரிய நிர்வாகர்கள் ஜீவகாருண்யத்தை எல்லாருக்கும் பத்திரிகைகள் மூலமாகவும் போதிக்கவேண்டுமென்று அபிப்பிராயங்கொண்டு அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

அந்த அபிப்பிராயத்தை யனுசரித்து ஜீவ ஹிம்ஸை செய்பவர்க்கு விவேகமும், ஜீவ காருண்யமும் உண்டாக்கும் ஸமாசாரங்களடங்கிய "ஜந்து வர்த்தமான ஸாரம்" என்னும் ஒரு பத்திரிகையை, 1900ம் வருஷம்முதல் தமிழிலும், 1903-ம் வருஷந்தொடங்கித் தமிழ் தெலுங்கு ஆகிய இரண்டு பாஷைகளிலும், வருஷத்துக்கு நான்கு முறை பிரசுரஞ்செய்து வருகிறார்கள். பலவிதமாயுள்ள ஜீவராசிகளும் நம்மைப்போலவே கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டவையென்றும், அவைகளால் நமக்கு அநேகவிதமான உபயோகங்கள் உண்டென்றும், ஆகையால் நாம் அவைகளிடத்தில் பட்சமுட னிருக்கவேண்டுமென்றும், அவைகளுக்கு எல்லாவிதத்திலும் சௌக்கியத்தை உண்டாக்கவேண்டு மென்றும் இன்னும் அநேக நீதிகளை ஜனங்களுக்குப்போதிக்க வேண்டுமென்பதுமே இந்தப் பத்திராதிபரின் கருத்து.

இப்படி ஜனங்களுக்கு ஜீவகாருண்யத்தை போதிப்பதற்காகப் பிரதி வருஷமும் ஜந்து விநோதக் காட்சியொன்று நடத்தப்படுகிறது. மேலும், இச்சங்கத்துக்குச் சம்பந்தப்பட்டு, வாயில்லா ஜந்துக்களின் வைத்தியசாலையும், நாய்களுக்கோர் ஆசிரமமும் பஞ்சரப்போல் என்னும் சக்தியற்ற கிழ ஜந்துக்களின் ஆசிரமமொன்றும் ஏற்பட்டுப்பரிபாலித்து வரப்படுகின்றன. சங்கத்துக் காரியங்களும் அவற்றிற்கு உண்டான செலவுகளும் வருஷத்துக்கு வருஷம் தர்மசாலைகள் விருத்தியடைவதால் விசேஷமாய் அதிகரித்து வருகின்றன. இவ்வற்றிற்காக தர்மாத்மாக்களான தனவான்கள் அநேகர் அவரவர்களுக்குத் தோன்றியபடி பணம் முதலிய உதவிகளைப் புரிந்துவந்தும், அவை போதாமல் செலவுகள் நாளுக்கு நாள் அதிகரிப்பதால் அத்தரும காரியங்கள் யாதொரு குறைவின்றி நடப்பதற்காக எல்லாரும் அவரவர்களின் சக்திக்குத் தக்கபடி உதவி செய்யவேண்டும்.

## OPENINGS FOR BUSINESS.

## வியாபாரம்நடக்கக்கூடிய இடங்கள்.

[அடியிற்கண்ட வியாபாரங்களில் அக்கறையுள்ளவர்கள் "பிழைக்கும் வழி" பத்திரிகையைக் குறிப்பிட்டு விவரங்களைச் சொல்லி கல்கத்தாவில் "டைரெக்டர் ஜெனரல் ஆப் கமர்ஷியல் இன்டலிஜன்ஸ்" என்னும் அதிகாரிக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்]

PAINTS, COLOURS, VARNISHES.

க்ளாஸ் கோவில் பெயிண்டுகள், வர்ணங்கள், வார்னீஷுகள் செய்யும் ஒரு கம்பெனியாருக்கு அவைகளை இந்தியாவில் விற்க ஏஜண்டுகள் தேவையாம். (1284)

KAPOK AND GOAT HAIR.

இலவம் பஞ்சும் வெள்ளாட்டு மயிரும்.—ஜர்மனியிலுள்ள ஹாம்பர்க் என்னும் நகரத்தில் ஒரு வியாபாரிக்கு இலவம்பஞ்சும் வெள்ளாட்டு மயிரும் ஏற்றுமதி செய்யக்கூடியவர்களுடைய விலாஸம் தேவையாம். (1287)

WRAPPING PAPER.

மேலே சுத்தும் கடுதாசு.—ஸாமான்களுக்கு மேலே சுத்துவதற்கு உபயோகமான கடுதாசு செய்யப்போகும் ஒரு கம்பெனிக்கு அவைகளை ரொக்கத்துக்கு வாங்கியோ அல்லது கமிஷனுக்கோ, கல்கத்தா, பம்பாய், கராச்சி, ரெங்கூன், இந்த இடங்களில் விற்கக்கூடிய பெரிய வியாபாரிகளின் விலாஸம் தேவையாம். (1288)

PERFUMERY.

வாஸனை.—வாஸனை ஸாமான்கள் செய்து ஏற்றுமதி செய்யும் ஒரு இங்கிலீஷ் கம்பெனிக்கு அவைகளை விற்க, ரெங்கூன், கல்கத்தா முதலிய, இடங்களில் ஏஜண்டுகள் தேவையாம். (1289)

KAPOK.

இலவம்பஞ்சு —ஹாலந்து தேசத்திலுள்ள அம்ஸ்டர்டாம் என்னும் பட்டணத்தில் ஒரு வியாபாரிக்கு இலவம்பஞ்சு வியாபாரம் செய்யும் வர்த்தகர்களின் விலாஸந் தேவையாம். (1292)

## MADRAS MARKET REPORTS.

## மதராஸ் மார்க்கெட் நிலவரங்கள்.

தென்னிந்தியா சேம்பர் ஆப் காமர்ஸ் என்று சொல்லப்படும் வர்த்தகச் சங்கத்தாரின் ஜனவரி மாஸம் 17-ம்வ ரிப்போர்ட்டுப்படி.

PRODUCE MARKET.—விளைபொருள்கள்.

| | ரூ. |
|---|---|
| ஆவாரம்பட்டை பாரம் 1-க்கு .. | 16 முதல் 23 |
| கொன்னைப்பட்டை ஷை .. | $11\frac{1}{2}$ முதல் 13 |
| கடப்பை கடுக்காய் ஷை .. | 9 முதல் 10 |
| சேலம் ஷை ஷை .. | 17 முதல் 18 |
| நல்லெண்ணெய் ஷை .. | 105 முதல் 110 |
| புங்கம் எண்ணெய் ஷை .. | 65 முதல் 85 |
| எட்டிக்கொட்டை ஷை .. | |
| விளக்கெண்ணெய் ஷை .. | 76 முதல் 77 |
| கொட்டை முத்து .. | $9\frac{1}{2}$ முதல் $9\frac{3}{4}$ |

| | ரூ. அ. பை |
|---|---|
| பந்தர் பச்சை அரிசி 44 படி | 8 0 0 |
| நெல்லூர் அரிசி 31 படி .. | $6\frac{3}{4}$ முதல் 7 |
| கோதுமை 4 படி .. | 1 0 0 |
| கொள்ளு 195 ராத்தல் | $5\frac{1}{4}$ முதல் $5\frac{1}{2}$ |
| வெங்காயம் (தாட்பத்திரி) பாரம் .. | 10 8 0 |
| ஷை (பல்லாரி) ஷை .. | 10 0 0 |
| பங்களூர் உருளைக்கிழங்கு | 15 0 0 |

METALS—உலோகங்கள்.

| | |
|---|---|
| பித்தளைத்தகடுகள் 'R-x' ம் இங்கிலீஷ—ம் ராத்தல் 20-60, 30-60, 20-40, 20-50, பாரம் | ரூ. ..213 முதல் 215 |
| செப்புத் தகடுகள் பாரம் .. | 262 |
| செப்புக்கட்டி ஷை .. | 225 |
| நாகம் ஷை .. | 84 |
| ஷை (உள்ளூர்) ஷை .. | 80 |
| ஈயம் ஷை .. | 60 |
| காரீயம் ஷை .. | 70 |
| வெள்ளீயம் ஷை .. | 200 வராகன். |

IRON—இரும்பு.

| | |
|---|---|
| மருக்கி சட்டம் 2 செ. பாரம் ரூ. | 23 முதல் 24 |
| சீமை .. .. | ..30 முதல் 40 |
| மருக்கி தகடு 6—9, 12—13, | 24—37 |
| பீப்பாய்க் கட்டு .. .. | 27—28 |
| 8 பட்டை எஃகு .. .. | 22 |
| எஃகு வில்கட்டு .. .. | 27—31 |
| திரணைக் கம்பி மருக்கி 2 செ. .. | 22—25 |
| சீமை .. .. .. | 40-46-49 |

## SEASON.

## காலஸ்திதி.

RAINFALL.

மழை.—1911ஞு ஏப்ரல் மீ 1-உயிலிருந்து ஜனவரிமீ 31-ம்வ வரையில் பெய்த மழையின் அளவும், இந்தக் காலத்தில் ஸராஸரி பெய்திருக்க வேண்டிய மழையின் அளவும், கீழே அங்குலம், ஸெண்டுகளாக குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை அங்குலம். |
|---|---|---|
| கோபால்பூர் | 33.88 | 46.37 |
| வால்டேர் | 21.95 | 43.06 |
| காக்கிநாடா | 31.32 | 39.00 |
| மசூலிப்பட்டணம் | 36.13 | 40.56 |
| நெல்லூர் | 37.71 | 30.56 |
| மதராஸ் | 39.36 | 49.96 |
| கூடலூர் | 47.70 | 51.58 |
| நாகப்பட்டணம் | 67.51 | 54.48 |
| பாம்பன் | 29.12 | 37.55 |
| கொழும்பு | 63.09 | 82.96 |
| திருவநந்தபுரம் | 61.50 | 60.32 |
| கொச்சி | 110.50 | 111.92 |
| கள்ளிக்கோட்டை | 99.67 | 114.38 |
| மங்களூர் | 100.98 | 123.84 |
| மெர்க்காரா | 138.34 | 123.99 |
| ஐதராபாத் | 20.86 | 30.93 |
| ரெய்ச்சூர் | 18.97 | 30.06 |
| பல்லாரி | 12.85 | 19.57 |
| கர்நூல் | 17.94 | 27.67 |
| கடப்பை | 23.30 | 32.95 |
| ஹாஸ்ஸான் | 32.80 | 34.55 |
| பெங்களூர் | 29.04 | 34.49 |
| கொடைக்கானல் | 36.64 | 55.65 |
| உதகமண்டலம் | 61.48 | .. |
| கோயம்புத்தூர் | 25.04 | 19.83 |
| வேலூர் | 34.06 | .. |
| சேலம் | 24.72 | 39.47 |
| திருச்சினாப்பள்ளி | 33.09 | 31.31 |
| புதுக்கோட்டை | 35.69 | .. |
| மதுரை | 28.33 | 32.33 |
| திருநெல்வேலி | 23.81 | 26.13 |